# கம்யூனிஸ்ட்
## கட்சியின்
# அறிக்கை




காரல் மார்க்ஸ்
பிரெடரிக் எங்கல்ஸ்

உலகத் தொழிலாளர்களே ஒன்றுபடுங்கள்!

காரல் மார்க்ஸ்
பிரெடரிக் எங்கல்ஸ்
எழுதிய

# கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை - 2.

“மேதையின் தெளிவுடனும் பேரொளியுடனும் இந்த நூல் புதிய உலகக் கண்ணோட்டத்தை வகுத்துத் தருகிறது. சமுதாய வாழ்வுத் துறையைத் தழுவி நிற்கும் முன்பின் முரணில்லாத பொருள்முதல் வாதத்தையும்; மிகவும் தீர்க்கமானதும் அனைத்தையும் தழுவியதாகவும் உள்ள வளர்ச்சிக் கோட்பாடான தர்க்க இயலையும்; வர்க்கப் போராட்டம், ஒரு புதிய கம்யூனிஸ்ட் சமுதாயத்தின் படைப்புக் கர்த்தாவான தொழிலாளி வர்க்கத்தின் உலக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த புரட்சிப் பாத்திரம் ஆகியவற்றின் தத்துவத்தையும் வகுத்துக் கூறுகிறது”

**—லெனின்**

“அவர்களுடைய **அறிக்கை**யின் மூலமாக மார்க்ஸும் எங்கல்ஸும் ஒரு சகாப்தத்தை சிருஷ்டித்தார்கள்.”

**—ஸ்டாலின்**

# பதிப்பகத்தார் குறிப்பு

இது "கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை" என்ற நூலின் தமிழ்ப் பதிப்பு.

1848-ம் ஆண்டு எழுதப்பட்ட ஜெர்மானிய மூலத்தை, 1888ல் **சாமுவேல் மூர்** என்பவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். பிரெடரிக் எங்கல்ஸ் சரிபார்த்த பின் அது வெளியிடப்பட்டது. அந்த ஆங்கில மொழிபெயர்ப்பை மாஸ்கோவிலுள்ள "அன்னிய மொழிகள் பதிப்பகம்" வெளியிட்டிருக்கிறது. அதைத் தமிழ்ப்படுத்தியே நாம் இப்பொழுது பிரசுரிக்கிறோம்.

1888-ம் ஆண்டு ஆங்கிலப் பதிப்புக்கும் 1890-ம் ஆண்டு ஜெர்மானியப் பதிப்புக்கும் எங்கல்ஸ் எழுதிய குறிப்புகளும் பல்வேறு பதிப்புகளுக்கு நூலாசிரியர்கள் எழுதிய முகவுரைகளும் மாஸ்கோ பதிப்பில் கொடுக்கப்பட்டிருக்கின்றன; அவற்றையும் இந்தப் பதிப்பில் தமிழ்ப் படுத்தித் தந்திருக்கிறோம்.

1888-ம் ஆண்டின் ஆங்கிலப் பதிப்புக்கு எங்கல்ஸ் எழுதிய முகவுரையை மட்டும் முதலில் அமைத்திருக்கிறோம்; இதர முகவுரைகள் இறுதியில் அனுபந்தங்களாக அமைந்துள்ளன.

தமிழில் மொழிபெயர்த்த தோழர் **எஸ். ராமகிருஷ்ணன்** எழுதிய குறிப்புகளுக்குப்பின் (மொ-ர்.) என்று குறித்திருக்கிறோம்.

சென்னை ஜனசக்தி பிரசுராலயத்தார் தமிழில் 1948-ல் இந்த நூலை முதலில் வெளியிட்டனர். எங்களுடைய இந்தப் பதிப்பு, 1955-ல் மாஸ்கோ "அன்னிய மொழிகள் பதிப்பகம்" வெளியிட்ட ஆங்கில நூலிலிருந்து தோழர் ராமகிருஷ்ணன் முற்றிலும் புதிதாக மொழிபெயர்த்ததாகும்.

**பிரசுரிப்போர்.**

# பொருளடக்கம்

# 1888-ம் ஆண்டின் ஆங்கிலப் பதிப்புக்கு முகவுரை

'கம்யூனிஸ்ட் சங்கம்' என்ற ஸ்தாபனத்தின் அதிகாரபூர்வமான வேலைத்திட்டமாக 'அறிக்கை' வெளியிடப்பட்டது. இந்தச் சங்கம், முதலில் முற்றிலும் ஜர்மானியர் ஸ்தாபனமாகவிருந்தது; பிறகு சர்வதேச ஸ்தாபனமாக வளர்ந்தது. 1848க்கு முன் *ஐரோப்பிய நிலப்பரப்பில் நிலவிய அரசியல் நிலைமைகளில், அது ரகசிய சங்கமாக விருப்பதைத் தவிர்க்கமுடியவில்லை. 1847 நவம்பரில், லண்டனில் கூடிய கம்யூனிஸ்ட் சங்கக் காங்கிரஸில், ஒரு பூர்த்தியான தத்துவார்த்த-நடைமுறைத் திட்டத்தை, பிரசுரத்துக்காகத் தயாரிக்குமாறு, மார்க்ஸும் எங்கல்ஸும் கட்டளையிடப்பட்டனர். 1848 ஜனவரியில் அது ஜர்மானிய மொழியில் தயாராயிற்று. பிப்ரவரி 24ல் பிரெஞ்சுப் புரட்சி நடைபெறுவதற்குச் சில வாரங்களுக்கு முன்னால், அந்தக் கைப்பிரதி லண்டனிலிருந்த அச்சகத்தாருக்கு அனுப்பப்பட்டது. 1848 ஜூன் மாதத்தில் புரட்சிக் கலகம் ஏற்படுவதற்குச் சற்றுமுன், அறிக்கையின் பிரெஞ்சு மொழிபெயர்ப்பு பாரிஸ் நகரத்தில் வெளிவந்தது. திருமதி ஹெலென் மாக்பர்லேன் செய்த முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு லண்டனில், 1850ல் ஜார்ஜ் ஜூலியன் ஹார்னி என்பவரின் 'ரெட் ரிபப்ளிகன்' சஞ்சிகையில் பிரசுரிக்கப்பட்டது. ஒரு டேனிஷ் மொழிபெயர்ப்பும் போலிஷ் பதிப்பும்கூட வெளிவந்தன.

பூர்ஷ்வாக்களுக்கும் தொழிலாளருக்குமிடையே நடைபெற்ற முதல் பெரும் போராட்டமான பாரிஸ் புரட்சிக் கலகம் (1848 ஜூனில் நிகழ்ந்தது) தோல்வியுற்றது. இதன் பலனாக, ஐரோப்பிய தொழிலாளி வர்க்கத்தின் சமுதாய அரசியல் அபிலாஷைகள் கொஞ்ச காலத்துக்குப் பின்னணிக்குத் தள்ளப்பட்டன. அதன் பிறகு, பிப்ரவரிப் புரட்சிக்கு முன்பிருந்ததைப்போலவே, மீண்டும் உடைமை வர்க்கத்தின் பல்வேறு பகுதிகளுக்குமிடையேதான், தலைமையதிகாரத்துக்கான போராட்டம் நடைபெற்றது. அரசியல்

---

* ஐரோப்பிய நிலப்பரப்பு என்பது பிரிட்டிஷ் தீவுகள் நீங்கலாகவுள்ள ஐரோப்பிய நாடுகளைக்கொண்டது. (மொ-ர்.)

துறையில், குறைந்தபட்ச உரிமைக்கே தொழிலாளி வர்க்கம் போராடவேண்டியிருந்தது; நடுத்தரவர்க்கத் தீவிரவாதிகளின் தீவிரப் பகுதியாகச் செயலாற்றும் நிலைமைக்கு அது தாழ்த்தப்பட்டது. எங்காவது சுயேச்சையான தொழிலாள வர்க்க இயக்கங்கள் உயிர்த்துடிப்பைக் காட்டினால், அந்த இயக்கங்கள் தயவு தாட்சண்யமில்லாமல் வேட்டையாடப்பட்டன. இவ்வாறாக, பிரஷ்ய போலீஸ் படை, அப்பொழுது கலோன் நகரத்திலிருந்த கம்யூனிஸ்ட் சங்க மத்தியக் குழுவை வேட்டையாடிற்று. மத்தியக்குழு உறுப்பினர்கள் கைதுசெய்யப்பட்டனர்; பதினெட்டு மாதங்கள் சிறை வைத்திருந்தபின், 1852 அக்டோபரில் அவர்கள்மீது விசாரணை நடத்தப்பட்டது. இந்தப் பிரசித்திபெற்ற "கலோன் கம்யூனிஸ்ட் விசாரணை" அக்டோபர் 4 லிருந்து நவம்பர் 12 முடிய நடந்தது. கைதிகளில் ஏழுபேர் மூன்று வருஷங்கள் முதல் ஆறு வருஷங்கள்வரை கோட்டைச் சிறைவாசம் அனுபவிக்க வேண்டுமென்று தண்டிக்கப்பட்டனர். அந்தத் தண்டனைக்குப்பின், மிச்சமிருந்த அங்கத்தினர்கள் சங்கத்தை அதிகாரபூர்வமாகக் கலைத்துவிட்டனர். அறிக்கையைப் பொறுத்தமட்டில், அது இருந்த இடம் தெரியாமல் மறைந்து, மறக்கப்பட்டுவிடும்போல் தோன்றியது.

ஆளும் வர்க்கங்களின்மீது இன்னொரு தாக்குதலைத் தொடுப்பதற்குத் தேவையான பலத்தை ஐரோப்பிய தொழிலாளிவர்க்கம் மீண்டும் பெற்றவுடன், **சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம்** தோன்றியது. ஆனால், ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமிருந்த போர்க்குணமிக்க தொழிலாளர்கள் அனைவரையும் ஒன்றாக ஐக்கியப்படுத்தும் நோக்கத்துடன் அமைக்கப்பட்ட இந்த ஸ்தாபனம், 'அறிக்கை'யில் வகுக்கப்பட்டுள்ள கோட்பாடுகளை உடனடியாகப் பிரகடனம் செய்யமுடியவில்லை. ஆங்கிலேயத் தொழிற்சங்கங்கள், பிரான்ஸ், பெல்ஜியம், இத்தாலி, ஸ்பெயின் ஆகிய நாடுகளில் புரூதானைப் பின்பற்றுகிறவர்கள், ஜெர்மனியில் *லாஸாலைப் பின்

* லாஸாலைப் பொறுத்தமட்டில், அவர் எங்களிடம் மார்க்ஸின் சீடர் என்றே கூறிக்கொள்வார். எனவே, அறிக்கையின் அடிப்படையில்தான் அவர் நின்றார். ஆனால் 1862-64ல் நடத்திய கிளர்ச்சியில், அரசாங்கத்தின் கடன் உதவியுடன், கூட்டுறவுத் தொழிற்சாலைகளை நடத்தவேண்டுமென்பதற்குமேல் அவர் ஒன்றும் கோரவில்லை. (எங்கல்ஸ் குறிப்பு)

பற்றுகிறவர்கள் ஆகியோரும் ஒப்புக்கொள்ளக் கூடியதாக ஒரு பரந்த திட்டத்தைத்தான் சர்வதேச ஸ்தாபனம் வகுக்கமுடியும். சகல கட்சியினருக்கும் திருப்தியளிக்கும் வகையில் இந்தத் திட்டத்தை வகுத்த மார்க்ஸ், தொழிலாளிவர்க்கம், கூட்டு நடவடிக்கையிலிருந்தும் பரஸ்பர விவாதத்திலிருந்தும் நிச்சயமாகப் பெறவிருக்கும் அறிவு வளர்ச்சியில் மட்டுமே நம்பிக்கை வைத்தார். மூலதனத்துக்கு எதிராக நடைபெறும் போராட்டத்தின் நிகழ்ச்சிகளும், சாதகபாதக மாறுதல்களும், அந்தப் போராட்டத்தின் வெற்றிகளைவிடவும் அதிகமாக அதன் தோல்விகளும், அவர்களுடைய பற்றுதலுக்கு உரித்தான பல்வேறு உபாயங்களின் குறைபாட்டை எடுத்துக்காட்டி, தொழிலாளிவர்க்க விமோசனத்துக்கு வேண்டிய உண்மையான நிலைமைகளை அவர்கள் பூர்த்தியாகப் புரிந்துகொள்வதற்கு வாய்ப்பை உண்டாக்கித்தானாக வேண்டும். இவ்வாறு மார்க்ஸ் கருதியது சரியாகவேயிருந்தது. 1874ல் சர்வதேச ஸ்தாபனம் கலைந்தபொழுது, தொழிலாளர்கள், 1864லிருந்த நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தனர். பிரான்ஸில் புருதானிஸமும், ஜர்மனியில் லாஸாலிஸமும் இறந்துகொண்டிருந்தன. பழமைப் பற்றுகொண்ட இங்கிலீஷ் தொழிற் சங்கங்களில் பல, சர்வதேச ஸ்தாபனத்திலிருந்து முன்பே கத்தரித்துக்கொண்ட போதிலும், அவைகூடப் படிப்படியாக முன்னேறி வந்தன; எனவே, சென்ற வருடத்தில், ஸ்வான்ஸி என்ற இடத்தில், அந்தத் தொழிற் சங்கங்களின் சார்பில், அவற்றின் தலைவர், "ஐரோப்பிய நிலப்பரப்பு நாடுகளின் சோஷலிஸத்திடம் எங்களுக்கு இருந்த நடுக்கமும் பயமும் போய்விட்டது" என்று குறிப்பிட்டார். உண்மையில், "அறிக்கை"யின் கோட்பாடுகள் சகல தேசங்களின் உழைப்பாளிகள் மத்தியிலும் கணிசமான அளவுக்குச் செல்வாக்குப் பெற்றன.

இவ்வாறு, "அறிக்கை"யே மீண்டும் முன்னணிக்கு வந்தது. 1850லிருந்து, ஜர்மானிய மூலம், ஸ்விட்சர்லந்திலும் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பன்முறை அச்சிடப்பட்டிருக்கிறது. 1872ல் அது நியூ யார்க்கில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு "உட்ஹல், கிளாப்லின் வாரப்பத்திரிகை"யில் பிரசுரிக்கப்பட்டது. நியூ யார்க் 'சோஷலிஸ்ட்' பத்திரிகை, அந்த ஆங்கிலப் பதிப்பி

லிருந்து பிரெஞ்சு பாஷையில் மொழி பெயர்த்து வெளியிட்டது. அதன்பிறகு, குறைந்தபட்சம் இரண்டு ஆங்கிலப் பதிப்புகள் ஏறக் குறையச் சின்னபின்னமான வடிவத்தில் அமெரிக்காவில் பிரசுர மாகியுள்ளன; அவற்றில் ஒரு பதிப்பு இங்கிலாந்தில் அச்சிடப் பட்டது. பாக்குனின் செய்த முதல் ருஷ்ய மொழி பெயர்ப்பு, 1863 வாக்கில் ஜெனீவாவில் ஹெர்ஸன் என்பவரின் 'கோல, கோல்' அச்சகத்திலிருந்து வெளிவந்தது. இரண்டாவது ருஷிய மொழிபெயர்ப்பை வீரம்மிகுந்த **வீரா ஸாஸிலிச்*** என்பவர் செய்தார்; அது 1882ல் ஜினிவாவில் வெளிவந்தது. 1885ல் ஒரு புதிய டேனிஷ் பதிப்பு, "சோஷல் டெமாக்ரடிக் பிப்லியாதெக்" என்ப தில் காணப்படுகிறது. 1885லேயே ஒரு புதிய பிரெஞ்சு மொழி பெயர்ப்பை 'ல சோஷலிஸ்ட்' பிரசுரித்தது. இதிலிருந்து ஒரு ஸ்பானிஷ் பதிப்பு தயாராகி, 1886ல் மாட்ரிட் நகரத்தில் வெளி யிடப்பட்டது. ஜர்மானிய மறுபதிப்புகளை எண்ணி முடியாது. குறைந்தபட்சம் பன்னிரண்டு பதிப்புகளாவது பிரசுரமாகியுள் ளன. ஆர்மீனிய பாஷைப் பதிப்பு சில மாதங்களுக்குமுன் கான் ஸ்டாண்டிநோபிள் நகரத்தில் பிரசுரமாகி யிருக்கவேண்டும். ஆனால் மார்க்ஸ் பெயருள்ள புத்தகத்தை வெளியிடப் பதிப்பகத் தார் பயப்படுவதாலும், மொழி பெயர்ப்பாளர் அதைச் சொந்த சிருஷ்டி என்று சொல்ல மறுத்ததாலும், அது வெளிவரவில்லை யென்று எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. வேறு பாஷை களில் மொழி பெயர்க்கப்பட்டிருப்பதாகவும் நான் கேள்விப்பட்டி ருக்கிறேன்; ஆனால் நான் அவற்றை நேரில் பார்த்ததில்லை. ஆகவே, "**அறிக்கை**"யின் சரித்திரமானது, பெரிய அளவுக்கு, நவீ னத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் சரித்திரத்தைப் பிரதிபலிக் கிறது; தற்சமயத்தில் சோஷலிஸ்டு இலக்கியத்தில் மிகவும் அதிக மாகப் பரவியிருப்பதும், மிகவும் அதிகமாகச் சர்வதேசத் தன்மை யைப் பெற்றிருப்பதும், சைபீரியாவிலிருந்து காலிபோர்னியாவரை யுள்ள கோடானுகோடி உழைப்பாளி மக்களால் தமது பொதுத் திட்டமாக ஏற்கப்பட்டிருப்பதும் அதுவே என்பதில் சந்தேகமில்லை.

---

* உண்மையில், பிளகானவ் என்பவரே மொழிபெயர்ப்பாளர். 'ருஷியா வின் சமூக உறவுகள்' என்ற கட்டுரையின் பின் குறிப்பில், எங்கல்ஸே, பிளகானவ் செய்த மொழிபெயர்ப்பு என்று இதைக் குறிப்பிடுகிறார். ப-ர்.

எனினும், அதை எழுதியபொழுது, நாங்கள் அதை ஒரு சோஷலிஸ்ட் அறிக்கையென்று பெயரிட்டிருக்க முடியாது. 1847ல், சோஷலிஸ்டுகளாகக் கருதப்பட்டவர்கள் யார்? ஒரு புறத்தில், பல்வேறு கற்பனு முறைகளைத் தழுவியவர்கள்—இங்கிலாந்தில் ஓவன் என்பவரைச் சார்ந்தவர்கள்; பிரான்ஸில் பூரியர் என்பவரைச் சார்ந்தவர்கள்; இந்த இரு வகையினரும் முன்பே தனிக் குழுக்களாகத் தாழ்ந்து, பையபைய மடிந்துகொண்டிருந்தனர். மறுபக்கத்தில், விதவிதமான சமுதாயக் குருட்டு வைத்தியர்களும் சோஷலிஸ்டுகளாகக் கருதப்பட்டனர்; இவர்கள் மூலதனத்துக்கும் லாபத்துக்கும் எத்தகைய அபாயமும் நேரிடாதவகையில், சகல ஒட்டல், பற்ற வைத்தல் முறைகளையும் கையாண்டு, எல்லா விதமான சமூகக் குறைபாடுகளையும் அகற்றிவிடுவோமென்று கூறினுர்கள். இருவகையினருமே (கற்பனுவாதிகள், போலி வைத்தியர்கள் ஆகிய இருவகையினருமே-மொர்.) தொழிலாளி வர்க்க இயக்கத்துக்குப் புறம்பானவர்களா யிருந்தனர்; அவர்கள் "கற்றறிந்த படிப்பாளி" வர்க்கங்களின் ஆதரவை விசேஷமாக நாடினுர்கள். எந்தத் தொழிலாளி வர்க்கப் பகுதி, அரசியல் புரட்சிமட்டும் போதாதென்பதை உணர்ந்து, முழுமையான சமூக மாறுதலின் அவசியத்தைப் பிரகடனஞ் செய்ததோ, அந்தப் பகுதி தன்னைக் கம்யூனிஸ்ட் என்று அழைத்துக்கொண்டது. அந்தக் கம்யூனிஸம் பக்குவமடையாத முதல் உருவமாகவிருந்தது. அது முற்றிலும் இயல்பாக எழுந்ததாகும். எனினும், அது உயிர்நிலையான அம்சத்தை எடுத்துப் பேசியது. பிரான்ஸில் ராபெட் என்பவரின் கற்பனு வாதக் கம்யூனிஸமும் ஜர்மனியில் வைட்லிங் என்பவரின் கற்பனு வாதக் கம்யூனிஸமும் உருப்பெறும் அளவுக்கு அது தொழிலாளி வர்க்கத்திடையில் வலுப்பெற்றிருந்தது. எனவே, 1847ல் சோஷலிஸம் ஒரு மத்தியதர வர்க்க இயக்கமாகவும் கம்யூனிஸம் ஒரு தொழிலாளி வர்க்க இயக்கமாகவும் இருந்தது. ஐரோப்பிய நிலப்பரப்பிலாவது, சோஷலிஸம் "கௌரவத்து"க்குப் பாத்திரமானதாகவிருந்தது; கம்யூனிஸம் பற்றிய கருத்து அதற்கு நேர் எதிரான அந்தஸ்தைப் பெற்றிருந்தது. "தொழிலாளி வர்க்கத்தின் சொந்த நடவடிக்கையின் மூலமே தொழிலாளி வர்க்கத்தின் விமோசனம் கைகூட வேண்டும்" என்பது ஆரம்பத்திலிருந்தே

எங்கள் கருத்தா யிருந்தபடியால், இரு பெயர்களில் நாங்கள் எதை ஏற்றுக்கொள்வது என்பதில் சந்தேகம் எழ முடியாது. மேலும், அதன் பிறகும், அந்தப் பெயரை விலக்கிவிடும் எண்ணம் எங்களுக்குக் கொஞ்சமும் கிடையாது!

இந்த அறிக்கை எங்களுடைய கூட்டுப் படைப்பாக விருப்பதால், அதன் உட்கருவாகவுள்ள அடிப்படைக் கருத்து மார்க்ஸுக்கே உரியது என்பதை எடுத்துரைப்பது என் கடமையென்று நான் கருதுகிறேன். அந்தக் கருத்து இதுதான்: ஒவ்வொரு சரித்திர பூர்வமான சகாப்தத்திலும், அப்பொழுது நிலவும் பொருளாதார உற்பத்தி-பரிவர்த்தனை முறையும், அவசியமாக அதிலிருந்தெழும் சமுதாய அமைப்பும்தான், அந்தச் சகாப்தத்தின் அரசியல் அறிவு இயல் சரித்திரத்தின் அடிப்படையாகும். அந்த அடிப்படையிலிருந்தே, இந்த அரசியல் அறிவு இயல் சரித்திரத்தை விளக்கமுடியும். எனவே, (நிலத்தைப் பொதுச் சொத்தாக வைத்திருந்த பூர்வீகக் குடிகள் சமூகம் கரைந்தொழிந்ததிலிருந்து) மனிதகுல வரலாறு முழுவதும் வர்க்கப் போராட்டங்களின் வரலாருகும்; சுரண்டுகிற வர்க்கங்களுக்கும் சுரண்டப்படும் வர்க்கங்களுக்கு மிடையே, ஆளும் வர்க்கங்களுக்கும் ஒடுக்கப்படும் வர்க்கங்களுக்குமிடையே நடைபெறும் போராட்டங்களின் வரலாருகும். இந்த வர்க்கப் போர்களின் சரித்திரம் தொடர்ச்சியான பரிணமங்களின் தொகுப்பாக விருக்கிறது. இது இன்று அடைந்திருக்கும் கட்டம் எத்தகையதென்ருல், சுரண்டலுக்கும் ஒடுக்குமுறைக்கும் உட்பட்டுள்ள தொழிலாளி வர்க்கமானது, சகல வகைப்பட்ட சுரண்டல், ஒடுக்குமுறை, வர்க்கபேதங்கள், வர்க்கப் போராட்டங்கள் ஆகியவற்றிலிருந்தும் சமுதாயத்தையே விடுதலை செய்யாமல், சுரண்டல் நடத்திவரும் ஆளும் வர்க்கமான பூர்ஷ்வாக்களிடமிருந்து தன்விடுதலையை மட்டும் பெறமுடியாது.

டார்வின் தத்துவம் உயிர் நூலுக்குச் சாதித்திருப்பதை, மேற்சொன்ன கருத்து சரித்திரத்துக்குச் சாதிக்கவிருக்கிற தென்பது என் அபிப்ராயம். 1845க்கு முந்தைய சில ஆண்டுகளில் நாங்கள் இருவருமே இந்தக் கருத்தைப் படிப்படியாக அணுகி வந்தோம். நான் சுயேச்சையாக எந்த அளவுக்கு இந்தக் கருத்தை

நோக்கி முன்னேறினேன் என்பதை "இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை" என்ற எனது நூல் நன்கு எடுத்துக் காட்டும். ஆனால் 1845ம் ஆண்டு வசந்தகாலத்தில் நான் மீண்டும் மார்க்ஸை பிரஸ்ஸல்ஸ் நகரத்தில் சந்தித்தபொழுது, அவர் இந்தக் கருத்தை நன்கு வகுத்திருந்தார்; நான் இங்கு அதை எடுத்துரைத்திருக்கும் அளவுக்குத் தெளிவாக, அவர் அதை என்னிடம் விளக்கினார்.

1872ம் ஆண்டின் ஜர்மானிய பதிப்புக்கு நாங்கள் கூட்டாக எழுதிய முகவுரையிலிருந்து கீழ்க்காணும் பகுதியை அப்படியே தருகிறேன் :—

"கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நிலைமை எவ்வளவு மாறியிருந்த போதிலும், இந்த அறிக்கையில் வகுக்கப்பட்டுள்ள பொதுவான கோட்பாடுகளை முழுமையாகப் பார்த்தால், அவை என்றும்போல இன்றும் பிசகற்றவை; இங்கும் அங்கும் சில விவரங்களைச் செம்மைப்படுத்தலாம் அறிக்கையே கூறுவதைப்போல இந்தக் கோட்பாடுகளை நடைமுறையில் கடைப்பிடிக்கும் விஷயம் எந்த இடத்திலும் சரி, எந்தக் காலத்திலும் சரி, அந்தந்தக் கால கட்டத்தின் சரித்திர பூர்வமான நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது. எனவே இரண்டாவது பகுதியின் இறுதியில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கும் புரட்சிகரமான நடவடிக்கைகள் விசேஷமாக வலியுறுத்தப்படவில்லை. இன்று அந்தப் பகுதி பல அம்சங்களில் வேறு வாசகங்களைக் கொண்டிருக்கவேண்டும். கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நவீனத் தொழில் பிரமாதமான முன்னேற்றங்களை அடைந்து வருகிறது; அத்துடன் கூடவே தொழிலாளி வர்க்கத்தின் கட்சி ஸ்தாபனம் விரிவடைந்தும் வளர்ந்தும் வருகிறது. இவற்றையும், இவற்றுடன்கூட, முதலில் பிப்ரவரி புரட்சியிலும், பிறகு அதற்கும் மேலாக தொழிலாளிவர்க்கம் முதன் முதலாக இரண்டு முழு மாதங்கள் அரசியல் அதிகாரத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டிருந்த பாரிஸ் கம்யூனிலும், கிடைத்த நடைமுறை அனுபவத்தைக் கணக்கிலெடுத்துக்கொண்டு பார்த்தால், சில விவரங்களில் இந்தத் திட்டம் காலாவதியாகிவிட்டது என்பது விளங்கும். குறிப்பாக, ஒரு விஷயத்தைக் கம்யூன் மெய்ப்பித்தது;

அதாவது, "தயாராயுள்ள அரசாங்க யந்திரத்தைத் தொழிலாளி வர்க்கம் அப்படியே எடுத்துக்கொண்டு தன் குறிக்கோளுக்காகப் பயன்படுத்தமுடியாது." ["பிரான்ஸில் உள்நாட்டு யுத்தம்" என்ற நூலில் (லண்டன், 1871) இந்தக் கருத்து மேலும் விவரமாக ஆராயப்பட்டிருக்கிறது]. மேலும், சோஷலிஸ்ட் இலக்கியத்தைக்குறித்து, 1847ம் ஆண்டுவரை மட்டுமே விமர்சித்திருக்கிறபடியால் இன்றைய நிலைமைக்கு அந்த விமர்சனம் பூர்த்தியானதாயில்லை என்பது வெளிப்படையாகும். மேலும், பல்வேறு எதிர்க் கட்சிகளுடன் கம்யூனிஸ்ட்களுக்குள்ள உறவுகள் பற்றிய குறிப்புகள் (நாலாவது பகுதி), இன்றும் கோட்பாடு ரீதியில் பிசகற்றவையாக விருந்த போதிலும், அவை வழக்கொழிந்தவையாகி விட்டன என்பது வெளிப்படை. ஏனென்றால் அரசியல் நிலைமை முழுமையும் மாறி விட்டது; சரித்திரத்தின் முன்னேற்றம் அங்கு குறிப்பிட்டுள்ள அரசியல் கட்சிகளில் பெரும்பாலானவற்றை வழித்தெறிந்து விட்டது.

"ஆனால் இந்த அறிக்கை ஒரு சரித்திர பூர்வமான தஸ்தவேஜியாகிவிட்டது. இனி அதை மாற்றுவதற்கு எங்களுக்கு எத்தகைய உரிமையும் கிடையாது".

இந்த மொழிபெயர்ப்பைச் செய்தவர் சாமுவேல் மூர் என்பராவர். மார்க்ஸ் எழுதிய "மூலதனம்" என்ற நூலின் பெரும் பகுதியை அவரே (ஆங்கிலத்தில்) மொழிபெயர்த்திருக்கிறார். இந்த "அறிக்கை" மொழிபெயர்ப்பை அவரும் நானும் கூட்டாகச் சரி பார்த்தோம். சரித்திர சம்பந்தமான உதாரணங்களை விளக்கும் சில குறிப்புகளை நான் சேர்த்திருக்கிறேன்.

லண்டன்,
1888, ஜனவரி 30. }

பிரெடரிக் எங்கல்ஸ்

# கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை

ஐரோப்பாவை ஒரு பேய் பிடித்தாட்டிக்கொண்டிருக்கிறது; அதுதான் கம்யூனிஸம். பழைய ஐரோப்பாவின் வல்லரசுகள் அனைத்தும், போப்பாண்டவரும் ஜார் மன்னனும், மெட்டர்னிச்சும் கீஸோவும் பிரெஞ்சுத் தீவிரவாதிகளும் ஜர்மானிய போலீஸ் ஒற்றர்களும், இந்தப் பேயை விரட்டுவதற்காக ஒரு புனிதமான ஒப்பந்தத்தைச் செய்து கொண்டிருக்கின்றனர்.

அதிகாரத்திலுள்ள எதிரிகளால் கம்யூனிஸ்ட் என்று இழிவு செய்யப்படாத எதிர்க் கட்சி எங்காவது இருக்கிறதா? தன்னைவிட முற்போக்கான எதிர்க் கட்சிகளையும், தன்னுடைய பிற்போக்கான விரோதிகளையும், கம்யூனிஸ்ட் என்று ஏட்டிக்குப் போட்டியாகப் பட்டம் சூட்டி இகழாத எதிர்க் கட்சி எங்காவது இருக்கிறதா?

இந்த உண்மையிலிருந்து இரு விளைவுகள் ஏற்படுகின்றன.

1. கம்யூனிஸம் ஒரு தனிப்பெரும் சக்தி என்பதை ஐரோப்பிய வல்லரசுகள் அனைத்தும் ஏற்கனவே அங்கீகரித்துவிட்டன.

2. தமது அபிப்ராயங்களையும் தமது லட்சியங்களையும் தமது போக்குகளையும் கம்யூனிஸ்ட்கள் பகிரங்கமாக உலகறியப் பிரசுரிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. கட்சியின் அறிக்கை ஒன்றைக் கொண்டே, கம்யூனிஸப் பூச்சாண்டி பற்றிய சிறு பிள்ளைக் கதைகளுக்கு மறுப்புக்கூற வேண்டியகாலம் வந்துவிட்டது.

இந்த நோக்கத்துடன், பல்வேறு தேசீய இனங்களைச் சேர்ந்த கம்யூனிஸ்ட்கள் லண்டனில் கூடி, ஆங்கிலம், பிரெஞ்சு, ஜர்மன், இத்தாலியன், பிளெமிஷ், டேனிஷ் மொழிகளில் வெளியிடுவதற்காகப் பின்வரும் அறிக்கையைத் தயாரித்தனர்.

# 1. *பூர்ஷ்வாக்களும் தொழிலாளர்களும்

இதுவரை இருந்திருக்கும் சமூகம் அனைத்தின் †சரித்திரமும் வர்க்கப் போராட்டங்களின் சரித்திரமாகும். சுதந்திரப் பிரஜையும்

---

* பூர்ஷ்வாக்கள்: நவீன முதலாளிகளின் வர்க்கம் என்று பொருள். இந்த நவீன முதலாளிகள் சமுதாயப் பொருளுற்பத்தி சாதனங்களின் சொந்தக்காரர்கள்; கூலிக்கு ஆட்களை அமர்த்தி வேலைவாங்குபவர்கள். தொழிலாளர்கள்: தமக்கென்று சொந்தமாக உற்பத்தி சாதனங்களைப் பெற்றிராதவர்களும், வாழ்க்கையை நடத்துவதற்காகத் தமது உழைப்புச் சக்தியை விலைபேசி விற்கவேண்டிய நிலைமைக்குத் தாழ்த்தப்பட்டிருப்பவர்களுமான நவீன காலத்துக் கூலி உழைப்பாளிகள் என்று பொருள்.

(எங்கல்ஸ் குறிப்பு).

† அதாவது 'எழுதப்பட்ட' சரித்திரம் முழுமையும் என்று பொருள். 1847-ல், சமுதாயத்தின் பூர்வீக வரலாற்றைப் பற்றிப் பதிவாகியுள்ள சரித்திர காலத்துக்கு முன் இருந்த சமுதாய ஸ்தாபனம்பற்றி அநேகமாக ஒன்றுமே தெரியவில்லை. அதன் பிறகு, 'ஹாக்ஸ்தொஸன்' என்பவர் ருஷியாவில் நிலம் பொது உடைமையாக விருந்ததைக் கண்டு பிடித்தார். அத்தகைய பொதுநில உடைமையையே சமூக அஸ்திவாரமாகக் கொண்டு, 'டூடானிக்' இனத்தவர் சரித்திரத்தில் தமது வாழ்வைத் தொடங்கினர்கள் என்று மாவ்ரர் என்பவர் நிரூபித்தார். இந்தியாவிலிருந்து அயர்லாந்து வரை எல்லா இடங்களிலும், கிராம சமுதாயங்களே சமூகத்தின் பூர்வீக ஏற்பாடாக இருந்தனவென்றும் இருந்திருக்கவேண்டுமென்றும், நாளாவட்டத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. இந்தக் கண்டுபிடிப்புகளுக்கெல்லாம் மகுடம் வைத்தாற்போல, கணம் என்ற கோத்திர அமைப்பின் உண்மையான தன்மையையும் அதற்கும் பூர்வகுடி சமூகத்துக்குமுள்ள உறவையும் கண்டுபிடித்து, பூர்வீக கம்யூனிஸ்ட் சமூகத்தின் மாதிரி வடிவம் எத்தகைய உள்ளமைப்பைக் கொண்டிருந்தது என்பதை மார்கன் வெட்ட வெளிச்சமாக்கினர். இந்தப் பூர்விகச் சமூகங்கள் கரைந்தொழிந்தவுடன், தனித்தனி வர்க்கங்களாக, இறுதியில் விரோதம் கொள்ளும் வர்க்கங்களாக, சமுதாயம் வேறுபடத் தொடங்குகிறது. இவ்வாறு பூர்வீகச் சமூகம் கரைந்தொழிந்த நிகழ்ச்சியை ஆரம்பத்திலிருந்து மீண்டும் எடுத்துரைப்பதற்குக் "குடும்பம், தனிஉடைமை, அரசு ஆகியவற்றின் தோற்றம்" என்ற நூலில் நான் முயன்றிருக்கிறேன். (எங்கல்ஸ் குறிப்பு)

அடிமையும், *பாட்ரிஷியனும் பிளெபியனும் †கில்டு மாஸ்டரும் ஜேர்னிமனும், ஒரே வாசகத்தில் சொல்லப்போனால், ஒடுக்குப வனும், ஒடுக்குப்படுபவனும் ஒருவரை யொருவர் இடைவிடாது எதிர்த்தார்கள். ஒருவரோடொருவர், ஒருசமயம் மறைமுகமாகவும் மறுசமயம் பகிரங்கமாகவும் ஓயாது போராடினார்கள். ஒவ்வொரு தடவையும் இந்தப் போராட்டத்தின் முடிவில், சமூகம் முழுமை யும் புரட்சிகரமான வகையில் புனரமைக்கப்பட்டது; அல்லது போராடும் வர்க்கங்களின் பொது நாசம் சம்பவித்தது. சரித் திரத்தின் ஆரம்பக்கால சகாப்தங்களில், அநேகமாக எல்லா இடங்களிலுமே, சமூகத்தில் பல்வேறு பிரிவுகளைக்கொண்ட சிக்க லான ஏற்பாட்டைக் காண்கிறோம்; சமூக அந்தஸ்தில் பல படி களைக் காண்கிறோம். புராதன ரோமாபுரியில், பாட்ரிஷியன்கள், ‡நைட்டுகள், பிளெபியன்கள், அடிமைகள் ஆகியோரைக் காண் கிறோம். மத்திய காலத்தில், நிலப்பிரபுக்களையும், பல்வேறு பணி களைச் செய்யக் கடமைப்பட்ட மானியக்காரர்களையும், கில்டு மாஸ் டர்களையும், ஜேர்னிமன்களையும், புதிதாக வேலை பயில்பவர்களை யும், பண்ணை அடிமைகளையும் காண்கிறோம். மேலும், அநேகமாக, இந்த வர்க்கங்கள் அனைத்திலும் ஒன்றுக்கொன்று கீழ்ப்பட்ட உட்பிரிவுகளையும் காணலாம்.

நிலப்பிரபுத்துவ சமூகத்தின் அழிவிலிருந்து முளைத்துத் துளிர்த்துள்ள நவீன பூர்ஷ்வா சமூகம், வர்க்கப் பகைமைகளை ஒழித்துவிடவில்லை. அது பழையவற்றுக்குப் பதிலாக, புதிய

---

* புராதன ரோமாபுரியில், செல்வம் படைத்த மேன்மக்கள் பாட்ரிஷி யன்களென்றும், சாமான்ய ஜனங்கள் பிளெபியன்களென்றும் அழைக் கப்பட்டனர்.

† மத்திய காலத்தில், தொப்பி செய்தல், தறி வேலை போன்ற குறிப் பிட்ட தொழில்களைச் செய்தவர்கள், தத்தம் தொழில் ரீதியாகச் சங்கம் அமைத்திருந்தனர். அதற்கு 'கில்டு' என்று பெயர். அது ஒரு தொழில் சமூக ஸ்தாபனம். அந்த ஸ்தாபனத்தின் முழு அங்கத்தினர்கள், கில்டு மாஸ்டர்கள். அவர்களிடம் கூலிபெற்று, தொழிலில் உதவிசெய்து, தொழிற் பயிற்சி பெற்றவர்கள் ஜேர்னிமன்களாவார்கள். (மொ-ர்).

‡**நைட்டுகள்** : ரோமாபுரியில், நைட்டுகள் என்பவர்கள் பெரும்பாலாக லேவாதேவிக்காரர்களாகவும் வரி வசூலிப்பவர்களாகவுமே இருந்தனர். (மொ—ர்.)

வர்க்கங்களையே, புதிய ஒடுக்குமுறைச் சூழ்நிலைகளையே, புதிய போராட்ட முறைகளையே ஸ்தாபித்திருக்கிறது.

எனினும், பூர்ஷ்வாக்களுடைய சகாப்தமாகிய நமது சகாப்தத்துக்கு, அதற்கே உரித்தான ஒரு குணம்சம் உண்டு; அது வர்க்கப் பகைமைகளைச் சிக்கறுத்து எளியனவாக்கிவிட்டது. மொத்தத்தில் ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டு பெரிய முகாம்களாக—ஒன்றையொன்று நேரடியாக எதிர்த்து நிற்கும் பூர்ஷ்வா வர்க்கம், தொழிலாளி வர்க்கம் என்ற இரு பெரிய வர்க்கங்களாக—சமுதாயம் மேன்மேலும் பிளவுபட்டு வருகிறது.

மத்திய காலத்துப் பண்ணை அடிமைகளின் மத்தியிலிருந்து உரிமைச் சாஸனம் பெற்ற நகரத்தார், முதலில் ஏற்பட்ட நகரங்களில் தோன்றினர்கள். இந்த *நகரத்தார் மத்தியிலிருந்து பூர்ஷ்வா வர்க்கத்தின் முதல் அம்சங்கள் வளர்க்கப்பட்டன.

அமெரிக்காவைக் கண்டு பிடித்ததும், †நன்னம்பிக்கைமுனையைச் சுற்றிச்செல்லும் வழியைக் கண்டதும், உதயமாகிக்கொண்டிருக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்குப் புதிய வாய்ப்பை அளித்தன. கிழக்கு இந்தியாவிலும் (அதாவது, இந்தியாவிலும்) சீனாவிலும் கிடைத்த மார்க்கெட்டுகள், அமெரிக்காவில் குடியேற்றம், காலனிகளுடன் நடந்த வியாபாரம், பொதுவாகப் பரிவர்த்தனைச் சாதனங்களிலும் விற்பனைப் பண்டங்களிலும் ஏற்பட்ட பெருக்கம் ஆகிய அனைத்துமாக, வியாபாரத்துக்கும் கப்பல் போக்குவரத்துக்கும் தொழிலுக்கும் அதற்குமுன் அறிந்திராத அளவுக்கு உத்வேகம் அளித்தன; அதன்மூலம், தள்ளாடிக்கொண்டிருந்த நிலப்பிரபுத்துவ சமூகத்திலிருந்த புரட்சி அம்சம் துரிதமான வளர்ச்சியைப் பெற்றது.

---

* 'நகரத்தார்': ஜெர்மன் மொழியில் 'பர்க்' என்றால் நகரம் அல்லது கோட்டை என்று பொருள். மத்திய காலத்தில் ஜர்மானிய நகரங்களில் வசித்த வியாபாரிகளும், தேர்ந்த தொழிலாளரும் 'பர்கர்கள்' என்று அழைக்கப்பட்டனர். பர்கர்கள் என்ற சொல்லே 'நகரத்தார்' என்று தமிழ்ப்படுத்தப்பட்டிருக்கிறது. பர்கர் என்ற பதத்திலிருந்தே 'பூர்ஷ்வா' என்ற சொல் வந்தது. (மொ-ர்).

† 'நன்னம்பிக்கை முனை', ஆப்பிரிக்காவின் தென்கோடியிலுள்ளது. அது வழியாக, ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்கு வரும் கடல் மார்க்கம் கண்டுபிடிக்கப்பட்டது. (மொ-ர்.)

புதிய மார்க்கெட்டுகளின் தேவைகள் வளர்ந்துகொண்டிருந்தன ; அவற்றைப் பூர்த்தி செய்வதற்கு, பிரபுத்துவத்தின் தொழில் ஏற்பாடு இப்பொழுது போதவில்லை. பிரபுத்துவத் தொழில் ஏற்பாட்டில் தொழிலுற்பத்தி, குறிப்பிட்ட தகுதிகள் உடையவர்களை மட்டும் சேர்த்துக்கொள்ளக்கூடிய கில்டுகளின் ஏகபோகமாயிருந்தது. அதற்குப் பதிலாக *பட்டறை உற்பத்திமுறை (Manufacturing System) வந்தது. இந்த முறையில் உற்பத்தி செய்த மத்தியதர வர்க்கம், கில்டு மாஸ்டர்களை ஒருபுறமாக ஒதுக்கித் தள்ளியது ; ஒன்றோடொன்று இணைந்த பல்வேறு கில்டுகளுக்கிடையே இருந்த தொழில் பிரிவினை, ஒவ்வொரு பட்டறையிலும் ஏற்பட்ட தொழில் பிரிவினைக்குமுன் மறைந்தொழிந்தது.

இதற்கிடையில், மார்க்கெட்டுகள் இடைவிடாமல் வளர்ந்துகொண்டிருந்தன ; தேவை அதிகரித்துக்கொண்டேயிருந்தது. பட்டறை உற்பத்திமுறைகூடப் போதவில்லை. அதனால், நீராவி

---

* **பட்டறை உற்பத்தி முறை:** முதலாளிகள் வேலைச் சாதனங்களைத் தொழிலாளிகளிடம் பிரித்துக்கொடுத்து, அவர்களை வீடுகளிலே உற்பத்தி செய்துகொண்டுவந்து தரும்படி சொல்வதுண்டு. தொழிலாளிகளை ஒரே கொட்டகையில் கூட்டிவைத்து வேலைகொடுத்து, மேஸ்திரி வைத்து வேலை வாங்குவதும் உண்டு. நவீன யந்திரங்கள் உபயோகத்தில் இல்லாத அந்தக் காலத்தில், உழைப்பின் உற்பத்தித் திறனை அதிகரிக்க முயற்சி எடுக்கப்பட்டது. ஒரே பட்டறையில் பல தொழிலாளிகள் கூட்டப்பட்டு, அவர்களிடையே விரிவான வேலைப் பிரிவினை செய்யப்பட்டது. அதைப் 'பட்டறை உற்பத்தி முறை' என்று மார்க்ஸ் அழைத்தார்.

பட்டறை உற்பத்திமுறை இருவகைகளில் வளர்ச்சியடைந்தது. முதலாவதாக, ஒரு பண்டத்தின் உற்பத்திக்கு அவசியமான பல்வேறு வினைத்திறமைகளை உடைய தொழிலாளரை ஒன்றுகூட்டும் முறை. அவர்கள், குறிப்பிட்ட பண்ட உற்பத்திக்குத் தாங்கள் எந்தப் பகுதி வேலையைச் செய்கிறார்களோ, அத்த வேலைப்பிரிவில் தேர்ச்சியடைவார்கள். இரண்டாவதாக ஒரு தொழிலைச் சேர்ந்த வினைஞர்கள் ஒன்று கூட்டப்படுவார்கள் ; நாளாவட்டத்தில் அவர்களிடையே வேலைப்பிரிவினை ஏற்படும். உதாரணமாக ஒருவர் கம்பி இழுப்பார்; இன்னெருவர் அதை நிமிர்த்தி நேராக்குவார் ; மூன்ருவது நபர் அதை வெட்டுவார் ; நான்காவது நபர் அதைக் கூர்மையானதாக்குவார். இவ்வாறு ஊசி உற்பத்தி பல நடிவடிக்கைகளாகப் பிரிக்கப்படும். "பல சில்லரை வேலைத் தொழிலாளிகளின் சேர்க்கையால் ஏற்படும் கூட்டு உழைப்பே, பட்டறை உற்பத்திக் காலகட்டத்தின் விசேஷ குணம்சமாக உள்ள முறையாகும்" என்று மார்க்ஸ் கூறுகிருர். (மொ-ர்)

யும் யந்திரங்களும் தொழிலுற்பத்தியைப் புரட்சிகரமான வகையில் மாற்றின. பட்டறை உற்பத்தி முறைக்குப் பதிலாக, நவீன ராட்சஸத் தொழில்முறை ஏற்பட்டது. பட்டறை உற்பத்திமுறையில் ஏற்பட்ட மத்தியதர வர்க்கத்துக்குப் பதிலாக, கோடீசுவரத் தொழிலதிபர்கள், மாபெரும் தொழிலாளர் அணிவகுப்பின் தளபதிகள், நவீன பூர்ஷ்வாக்கள் வந்தனர்.

அமெரிக்காவைக் கண்டுபிடித்த காரியம், உலக மார்க்கெட்டு உருப்பெறுவதற்கு வழி செய்தது; நவீனத்தொழில், அந்த உலக மார்க்கெட்டை ஸ்தாபித்துவிட்டது. இந்த மார்க்கெட், வர்த்தகத்துக்கும் கப்பல் போக்குவரத்துக்கும் நிலவழிப் போக்குவரத்துக்கும் அபரிமிதமான வளர்ச்சியை அளித்தது. அந்த வளர்ச்சி, தன் பங்கிற்கு, தொழில் விஸ்தரிப்புக்கு உதவியது. தொழில், வர்த்தகம், கப்பற் போக்குவரத்து, ரயில் பாதை ஆகியவை எந்த அளவுக்கு விஸ்தரித்தனவோ, அந்த அளவுக்குப் பூர்ஷ்வா வர்க்கம் வளர்ந்தது; அது தன் மூலதனத்தைப் பெருக்கியது; மத்திய காலந்தொட்டு இருந்துவந்த ஒவ்வொரு வர்க்கத்தையும் பின்னணிக்குத் தள்ளியது.

ஆகவே, நவீன பூர்ஷ்வா வர்க்கமே நீண்டகால வளர்ச்சியின் பயன் என்பதை, அதாவது, பொருளுற்பத்தி முறைகளிலும் பரிவர்த்தனை முறைகளிலும் தொடர்ந்தாற்போல் நிகழ்ந்த புரட்சிகளின் விளைவு என்பதை நாம் பார்க்கிறோம்.

பூர்ஷ்வா வர்க்க வளர்ச்சியின் ஒவ்வொரு படியிலும் அதற்கேற்ற அரசியல் முன்னேற்றத்தையும் அது அடைந்தது. நிலப்பிரபுத்துவச் சீமான்களின் ஆதிக்கத்தின்கீழ் அது ஒடுக்கப்பட்ட வர்க்கமாக இருந்தது; *மத்திய காலக் கம்யூனிலோ, அது ஆயுத

* மத்தியகாலக் கம்யூன் "மூன்றாவது எஸ்டேட்" என்ற முறையில் ஸ்தல சுயாட்சி, அரசியல் உரிமைகளை, நிலப்பிரபுத்துவ அதிபர்களிடமிருந்து போராடிப் பெறுவதற்கு முன்போடட, புதிதாகத் தோன்றிய பிரெஞ்சு நகரங்கள் கம்யூன் என்ற பெயரைக் கொண்டன. பொதுவாக பூர்ஷ்வா வர்க்கத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு இங்கிலாந்தும், அரசியல் வளர்ச்சிக்கு பிரான்ஸும், மாதிரி நாடுகளாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. (1888-ம் ஆங்கிலப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு) பிரான்சிலும் இதாலியிலும் நகரவாசிகள், நிலப்பிரபுத்துவ அதிபர்களிடமிருந்து சுயாட்சி சம்பந்தமான ஆரம்ப உரிமைகளை விலைகொடுத்தோ, போரா

மேந்திச் சுயாட்சி நடத்தும் சங்கமாக இருந்தது; இங்கு (இத்தாலியிலும் ஜர்மனியிலும்) சுயேச்சையான நகரக் குடியரசாகவிருந்தது; அங்கு (பிரான்ஸில் இருந்தமாதிரி) முடியாட்சியின் "மூன்ருவது எஸ்டேட்"டாக, வரி செலுத்தும் "மூன்ருவது எஸ்டேட்" டாக இருந்தது. பிற்பாடு, பட்டறை உற்பத்தி மேலோங்கிய காலகட்டத்தில், பிரபுக்களுக்கு எதிராக, எதேச்சாதிகார முடியாட்சிக்கோ அரைவாசிப் பிரபுத்துவத் தன்மைவாய்ந்த முடியாட்சிக்கோ அது பணிவிடைப் புரிந்தது. மெய்யாகவே, பெரிய முடியாட்சிகளுக்குக் கேந்திரமான ஆதாரமாக நின்ற பூர்ஷ்வா வர்க்கம், கடைசியாக, நவீனத் தொழிலும் உலக மார்க்கெட்டும் நிறுவப்பட்ட பின்னர், நவீன பிரதிநிதித்துவ அரசு முறையில் ஏகபோக அரசியல் ஆதிக்கத்தைத் தனக்கென்று வென்று கொண்டது. நவீன ராஜ்யத்தின் நிர்வாகம், பூர்ஷ்வா வர்க்கம் முழுமையின் பொது விவகாரங்களை நிர்வகிப்பதற்கான கமிட்டியைத் தவிர வேறு ஒன்றுமல்ல.

சரித்திரரீதியாகப் பார்க்கும்பொழுது, பூர்ஷ்வா வர்க்கம் ஒரு மிகப் புரட்சிகரமான பாத்திரத்தை வகித்துச் செயலாற்றியிருக்கிறது.

எங்கெல்லாம் பூர்ஷ்வா வர்க்கத்தின் கை ஓங்கிற்ருே, அங்கெல்லாம் அது சகல பிரபுத்துவ உறவுகளுக்கும் தந்தை வழி உறவுகளுக்கும் சம்பிரதாய உறவுகளுக்கும் முடிவு கட்டியது. தன்னைவிட "இயற்கையிலே மேம்பட்டவர்" என்போரிடம் மனிதன் கட்டுண்டுக் கிடக்கும்படி செய்த பல்வகைப் பிரபுத்துவத் தளைகளை அது தயவு தாட்சணியமில்லாமல் அறுத்தெறிந்தது. அம்மணமான சுயநலத்தைத் தவிர, உணர்ச்சியற்ற "ரொக்கப் பட்டுவாடா"வைத் தவிர, மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே வேறு எந்த உறவும் இல்லாமல் அது செய்துவிட்டது. அது சுயநலத்தைப் பெருக்கிக்கொள்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கச் செய்துவிட்டது. அன்புக்கே இடமில்லாத இந்தச் சுயநலப்பெருக்க நீரில், தெய்வ பக்தியினுல் ஏற்படக்கூடிய

---

டியோ பெற்றபொழுது, அவர்கள் தம் நகர சமூகங்களை கம்யூன்கள் என்று அழைத்தனர். (1890-ம் ஆண்டு ஜர்மன் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு)

தலைசிறந்த, மெய்மறந்த பரவச உணர்ச்சிகளையும், வீரப்பணியாற்றும் உற்சாகத்தையும், பண்படாதவர்களின் ஆசாபாச அபிநயங்களையும் மூழ்கடித்துவிட்டது. அது மனிதனின் மேன்மையைப் பரிவர்த்தனை மதிப்பாகப் பாகுபடுத்திவிட்டது. எண்ணிலடங்காதவையாக விருந்த மாற்ற முடியாத சாஸன உரிமைகளுக்குப் பதிலாக, வர்த்தக சுதந்திரம் என்ற ஒரே சுதந்திரத்தை, பிறரைப்பற்றி அக்கரை கொள்ளாத அந்தச் சுதந்திரத்தை, பூர்ஷ்வா வர்க்கம் ஏற்படுத்திவிட்டது. ஒரே வாக்கியத்தில் சொல்வதென்றால், மதம் சம்பந்தமான பிரமைகளாலும் அரசியல் பிரமைகளாலும் திரையிட்டு மறைக்கப்பட்டிருந்த சுரண்டலுக்குப் பதிலாக பூர்ஷ்வா வர்க்கம், அம்மணமான, வெட்கமில்லாத, நேரடியான கொடுமைநிறைந்த சுரண்டலை ஏற்படுத்திவிட்டது.

அதுவரை நன்மதிப்புக்கும் பயபக்திக்கும் பாத்திரமாகவிருந்த அலுவல்களின் மகிமையை பூர்ஷ்வா வர்க்கம் அகற்றிவிட்டது. அது டாக்டரையும் வக்கீலையும் மதகுருவையும் கவிஞனையும் விஞ்ஞானியையும் தன்னிடம் கூலி பெறும் உழைப்பாளிகளாகச் செய்துவிட்டது.

பூர்ஷ்வா வர்க்கம் குடும்பத்தின் நல்லுணர்ச்சித் திரையைக் கிழித்தெறிந்துவிட்டது; குடும்ப உறவை வெறும் பண உறவாக்கிவிட்டது.

மத்திய காலத்தின் மிருகத்தனமான செயல்வீர ஆடம்பரத்துக்கு-பிற்போக்காளரின் போற்றுதலுக்குப் பாத்திரமாகியிருக்கும் அதற்கு-ஏற்ற துணையாகச் சோம்பல் நிறைந்த செயலின்மை எப்படி ஏற்பட்டிருந்ததென்பதை பூர்ஷ்வா வர்க்கம் அம்பலப்படுத்திவிட்டது. மனிதனின் செயல் சாதிக்கக் கூடியது என்ன என்பதை அது முதன் முதலாக எடுத்துக்காட்டியிருக்கிறது. எகிப்து நாட்டுக் கூர்நுனித் தட்டைக் கோபுரங்களையும் (பிரமித்துகளை) ரோமாபுரியின் கால்வாய்களையும் *கோதிக் ஆலயங்களையும்

* கோதிக் முறையில் கட்டப்பட்ட ஆலயங்கள். இடைக்காலத்தில். இந்த சிற்ப முறையைப் பின்பற்றியே ஐரோப்பிய கிறிஸ்துவ ஆலயங்கள் கட்டப்பட்டன. படிப்படியாகக் குறுகி கூர்முனையில் முடியும் வளைவுகளும் கொத்து கொத்தாக அமைத்த தூண்களும் இந்த முறையின் தனிச் சிறப்புகளாகும்.

மிஞ்சிய அதிசயங்களை அது சாதித்திருக்கிறது. முன்பு மக்கள் நாடுவிட்டு நாடு சென்று குடியேறிய நிகழ்ச்சிகளையும், முன்பு நடைபெற்ற சிலுவைப் போர்களையும் அற்பமாகக் கருதத்தக்க வகையில், பூர்ஷ்வா வர்க்கம் படையெடுப்புப் பயணங்களை நடத்தியிருக்கிறது.

பூர்ஷ்வா வர்க்கம் உயிர் வாழவேண்டுமானால், அது பொருளுற்பத்திக் கருவிகளைப் புரட்சிகரமான வகையில் இடைவிடாமல் மாற்றிக்கொண்டிருக்க வேண்டும்; அதன் மூலம் பொருளுற்பத்தி உறவுகளையும், அத்துடன் சகல சமுதாய உறவுகளையும் இடைவிடாமல் மாற்றிக்கொண்டிருக்க வேண்டும். இதற்கு முன் தொழில் நடத்தி வந்த வர்க்கங்களின் நிலைமை இதற்கு மாறாக இருந்தது; பழைய உற்பத்தி முறைகளைக் கொஞ்சமும் மாற்றாமல் பாதுகாப்பதே அந்தத் தொழில் வர்க்கங்கள் உயிர்வாழ்வதற்கு முதல் தேவையாகவிருந்தது. பொருளுற்பத்தியை இடைவிடாமல் புரட்சிகரமாக மாற்றிக்கொண்டிருப்பதும், சகல சமுதாய சூழ்நிலைமைகளையும் தங்குதடையில்லாமல் கலக்கிக்கொண்டிருப்பதும், முடிவில்லாத நிச்சயமற்ற நிலையும் கொந்தளிப்பும்—பூர்ஷ்வா சகாப்தத்தை அதற்கு முந்தைய சகாப்தங்களிலிருந்து பிரித்துக் காட்டும் பிரத்தியேக அம்சங்களாகும். நிரந்தரமான, எளிதில் கெட்டிதட்டிப்போன உறவுகளும் அவற்றோடு இணைந்துள்ள பயபக்திக்குரிய பண்டையக் கருத்துக்களும் குருட்டு எண்ணங்களும் வழித்தெறியப்படுகின்றன. புதிதாக உருப்பெறும் உறவுகளோ உறுதிப்படுவதற்கு முன்னால் காலாவதியாகிவிடுகின்றன. உறுதிப் பொருட்களெல்லாம் கரைந்து காற்றோடு கலக்கின்றன. புனிதமானவை அனைத்தும் தமது தூய தன்மையை இழக்கின்றன; கடைசியாக, மனிதன், தன் வாழ்க்கையின் யதார்த்த நிலைமைகளையும், தன்போன்ற மனிதர்களுடன் தனக்குள்ள உறவுகளையும் அமைதியான அறிவுத் தெளிவுடன் நேருக்குநேர் பார்க்க வேண்டியிருக்கிறது.

தன் பொருட்களை விற்பதற்கு, இடைவிடாமல் விரிவடையும் மார்க்கெட் பூர்ஷ்வா வர்க்கத்துக்குத் தேவைப்படுகிறது. இந்தத் தேவை, பூர்ஷ்வா வர்க்கத்தை உலகப் பரப்பு முழுவதற்கும் துரத்துகிறது. அது ஒவ்வொரு இடத்துக்கும் சென்று கூடுகட்டி

அடையவேண்டும், குடியேறவேண்டும், தொடர்புகளைக் கொள்ள வேண்டும்.

உலக மார்க்கெட்டைச் சுரண்டுவதன்மூலம், பூர்ஷ்வா வர்க்கம், ஒவ்வொரு நாட்டின் பொருளுற்பத்திக்கும் பொருள் உபயோகத்திற்கும் ஒரு பொதுவான உலகத்தன்மையை அளித்திருக்கிறது. பிற்போக்காளர்கள் பெருங் கோபம் கொள்ளும் வகையில், அது தொழிலுக்கு அமைந்திருந்த தேசீய அஸ்திவாரத்தை நீக்கிவிட்டது. நீண்ட நெடுங் காலமாக நிலைத்திருந்த தேசியத் தொழில்கள் அழிக்கப்பட்டுவிட்டன அல்லது தினந்தோறும் அழிக்கப்படுகின்றன. அவற்றுக்குப் பதிலாகப் புதிய தொழில்கள் ஏற்படுகின்றன. இந்தப் புதிய தொழில்களை நிறுவும் பிரச்னை, நாகரீகமடைந்துள்ள நாடுகள் அனைத்துக்கும் ஒரு ஜீவ மரணப் பிரச்னையாகிவிட்டது; இந்தப் புதிய தொழில்கள் முன்போலச் சுதேசி மூலப் பொருட்களைப் பயன்படுத்துவதில்லை; தொலை தூரப் பிரதேசங்களிலிருந்து வரும் மூலப் பொருட்களை உபயோகிக்கின்றன. இந்தப் புதிய தொழில்களின் உற்பத்திப் பொருட்கள் உள்நாட்டில் மட்டுமல்ல, உலகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் உபயோகிக்கப்படுகின்றன. சொந்த நாட்டு உற்பத்திகளால் பூர்த்தியான பழைய தேவைகளுக்குப் பதிலாக, தொலைதூர நாடுகளிலிருந்தும் பிரதேசங்களிலிருந்தும் பொருட்களைக் கொண்டு வந்து பூர்த்திசெய்ய வேண்டிய புதிய தேவைகள் ஏற்படுகின்றன. முன்னாளில் அந்தந்த வட்டாரமும் அந்தந்த நாடும் தத்தம் தேவைகளைத் தாமே பூர்த்திசெய்து கொண்டிருந்த நிலைக்கு மாறாக, ஒவ்வொரு திசையிலும் உறவு ஏற்படுகிறது; தேசங்கள் உலகரீதியாக ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. பௌதீகப் பொருளுற்பத்தியைப் போலவே, அறிவுப் பொருளுற்பத்தியிலும் தனிப்பட்ட நாடுகளின் அறிவுப்படைப்புகள், (உலக)ப் பொதுச் சொத்தாகின்றன. ஒருதலைப்பட்சமான தேசீயப் பார்வையும் குறுகிய மனப்பான்மையும் மேன்மேலும் அசாத்தியமாகின்றன. எண்ணற்ற தேசிய இலக்கியங்களிலிருந்தும் ஸ்தல இலக்கியங்களிலிருந்தும் ஒரு உலக இலக்கியம் உதயமாகிறது.

சகல பொருளுற்பத்திக் கருவிகளையும் துரிதமாக அபிவிருத்தி செய்வதன் மூலமாகவும், போக்குவரத்துச் சாதனங்களின்

உயர்ந்த வசதிகளாலும், பூர்ஷ்வா வர்க்கம், சகல தேசங்களையும், மிகவும் புராதனமான அநாகரிகக் கட்டத்திலுள்ள நாடுகளையும் கூட, நாகரிகச் சுழலுக்குள் இழுத்துவிடுகிறது. அதன் விற்பனைப் பண்டங்களுடைய மலிவான விலைகளைப் பிரங்கிகளாகக் கொண்டு, அது சீன மதில்களைப்போன்ற சகல தடைகளையும் தகர்த்துத் தரைமட்டமாக்கிவிடுகிறது; அன்னியர்பால் அநாகரீக மக்களுக்குள்ள பிடிவாதமான வெறுப்பையும் பணியும்படி செய்கிறது. பூர்ஷ்வா உற்பத்தி முறையை ஏற்றுத் தழுவாவிட்டால், அழிவே ஏற்படும் என்ற நிர்ப்பந்தத்தின் மூலம், சகல நாடுகளும் அம்முறையைக் கடைப்பிடிக்கும்படி அது செய்கிறது, தான் நாகரீகம் என்று குறிப்பிடுவதை சகல நாடுகளும் ஏற்றுத் தழுவ வேண்டுமென்று பூர்ஷ்வா வர்க்கம் நிர்ப்பந்திக்கிறது; அதாவது அவையும் பூர்ஷ்வாக்களாக வேண்டுமென்று அது கட்டாயப்படுத்துகிறது. ஒரே வாக்கியத்தில் சொல்லப்போனல், தன் பிரதிபிம்பத்தைப் போன்ற ஒரு உலகத்தை அது சிருஷ்டிக்கிறது.

பூர்ஷ்வா வர்க்கம், நாட்டுப்புறப் பிரதேசத்தை நகரங்களின் ஆட்சிக்கு உட்படுத்திவிட்டது. அது மாபெரும் நகரங்களை உண்டாக்கியிருக்கிறது. கிராம ஜனத்தொகையுடன் ஒப்பிடும்பொழுது நகர மக்கட் தொகை பெரிய அளவுக்குப் பெருகும்படி செய்துவிட்டது. இவ்வாருக, ஜனத்தொகையின் கணிசமான பகுதியைக் கிராம வாழ்வின் மடமையிலிருந்து மீட்டிருக்கிறது. நாட்டுப்புறம் நகரங்களைச் சார்ந்திருக்கும்படி செய்ததைப்போலவே, அது, அநாகரீக நாடுகளும் அரைவாசி அநாகரீகமாகவுள்ள நாடுகளும் நாகரிக நாடுகளைச் சார்ந்திருக்கும்படி செய்துவிட்டது; விவசாயிகளின் நாடுகள், பூர்ஷ்வாக்களின் நாடுகளைச் சார்ந்திருக்கும்படி செய்துவிட்டது; கீழ்நாடுகள் மேல்நாடுகளைச் சார்ந்திருக்கும்படி செய்துவிட்டது.

மக்களும் உற்பத்திச் சாதனங்களும் சொத்துக்களும் சிந்திச் சிதறிக் கிடக்கும் நிலையை, பூர்ஷ்வா வர்க்கம் மேன்மேலும் ஒழித்துக்கொண்டேயிருகிறது. அது ஜனங்களை ஆங்காங்கே குவித்திருக்கிறது. உற்பத்திச் சாதனங்களை மையப்படுத்தியிருக்கிறது; சொத்துக்களை ஒரு சிலர் கையில் சேமித்திருக்கிறது. இதனல்

ஒரு விளைவு ஏற்பட்டேயாகவேண்டும்; அது ஏற்பட்டது. அது தான், அரசியல் அதிகாரத்தை ஒரு மையப்படுத்துவதாகும். தனித் தனி நலன்களையும் சட்டங்களையும் சர்க்கார்களையும் வரி முறைகளையும் கொண்ட மாகாணங்கள், சுயேச்சையாகவிருந்தாலும் சரி தளர்ந்த தொடர்பு கொண்டிருந்தாலும்,சரி, அவையெல்லாம் ஒரே சர்க்கார், ஒரே சட்டத் தொகுப்பு, ஒரே தேசீய வர்க்க நலன், ஒரே எல்லை, ஒரே பாதுகாப்புச் சுங்க ஏற்பாடு ஆகியவற்றைக் கொண்ட ஒரே தேசமாக ஐக்கியமடைகின்றன.

நூருண்டுகள்கூட ஆகாத காலத்துக்குள், பூர்ஷ்வா வர்க்கம், முந்திய தலைமுறைகள் அனைத்தும் படைத்ததைக் காட்டிலும் பிரமாதமான பிரம்மாண்டமான உற்பத்திச் சக்திகளைச் சிருஷ்டித்திருக்கிறது. இயற்கையின் சக்திகளை மனிதனுக்கு அடிமைப்படுத்துவது, யந்திர வகையருக்கள், தொழிலுக்கும் விவசாயத்துக்கும் ரசாயனத்தைப் பயன்படுத்தல், நீராவிக் கப்பல் போக்குவரத்து, ரயில் பாதைகள், மின்சாரத் தந்திகள், முழுமுழுக் கண்டங்களைச் செப்பனிட்டு, சாகுபடிக்குத் தகுதியாக்குதல், கால்வாய்களை வெட்டி நதிகளைப் பயன்படுத்துதல், ஜாலவித்தை மாதிரி மனித வாடை வீசாத இடங்களில் பெரிய ஜனத்தொகைகளைத் தோற்றுவித்தல்—இவையெல்லாம் ஒரு நூற்றுண்டுக்குள் கைகூடியிருக்கின்றன. சமுதாய உழைப்பின் மடியில் இத்தகைய உற்பத்தி சக்திகள் உறங்கிக் கொண்டிருக்கின்றனவென்று இதற்கு முன் எந்த நூற்றுண்டாவது கற்பனையாவது செய்ததுண்டா?

ஆகவே, பூர்ஷ்வா வர்க்கம் எத்த அடிப்படையில் தன்னை நிர்மாணித்துக்கொண்டிருக்கிறதோ, அந்தப் பொருளுற்பத்தி, பரிவர்த்தனை சாதனங்கள் பிரபுத்துவ சமூகத்தில் உண்டாயின என்பதை நாம் பார்க்கிறோம். இந்தப் பொருளுற்பத்தி, பரிவர்த்தனை சாதனங்களின் வளர்ச்சியின் ஒரு கட்டத்தில், பிரபுத்துவ சமூகத்தின் பொருளுற்பத்தி பரிவர்த்தனை ஆகியவற்றின் சூழ்நிலைகள் அதாவது பிரபுத்துவத்தின் விவசாயப் பட்டறை உற்பத்தித் தொழில் ஏற்பாடு அல்லது ஒரே வாசகத்தில் சொன்னால், பிரபுத்துவ உரிமை உறவுகள், முன்பே வளர்ந்துள்ள உற்பத்தி சக்திகளுடன் ஒத்துவராதவையாகிவிட்டன; அவை அத்தனையும்

தளைகளாகிவிட்டன. அந்தத் தளைகளைத் தகர்க்கவேண்டியிருந்தது; அவை தகர்க்கப்பட்டன.

அவற்றின் ஸ்தானத்தில், போட்டி சுதந்திரமும், அதற்கு உகந்ததாக்கப்பட்ட சமுதாய அரசியல் அமைப்பும், அடியெடுத்து வைத்தன; பூர்ஷ்வா வர்க்கத்தின் பொருளாதார, அரசியல் போதிக்கம் அமைந்தது.

அதேமாதிரியான ஒரு இயக்கம் நம் கண்கள் முன்னல் நடந்து வருகிறது. தன்னுடைய பொருளுற்பத்தி உறவுகளையும் பரிவர்த்தனை உறவுகளையும் உடைமை உறவுகளையும் கொண்டுள்ள நவீன பூர்ஷ்வா சமூகமானது, இவ்வளவு பெரிய ராட்சஸப் பொருளுற்பத்திச் சாதனங்களையும் பரிவர்த்தனை சாதனங்களையும் ஜாலவித்தை மாதிரி சிருஷ்டித்துள்ள இந்தச் சமூகமானது, தன் மந்திரத்தால் கீழ் உலகத்திலிருந்து தட்டி எழுப்பிக்கொண்டு வந்த சக்திகளை அதன்பின் கட்டுப்படுத்த முடியாமல் திண்டாடும் மந்திரவாதி மாதிரி இருக்கிறது. நவீன உற்பத்தி நிலைமைகளுக்கு எதிராக—பூர்ஷ்வா வர்க்கம் உயிர் வாழ்வதற்கும் ஆட்சி நடத்துவதற்கும் அவசியமாகவுள்ள சூழ்நிலைகளான உடைமை உறவுகளுக்கு எதிராக—நவீன உற்பத்தி சக்திகள் கலகம் செய்யும் சரித்திரமாகவே, கடந்த பல வருஷங்களின் தொழில் வர்த்தக வரலாறு உள்ளது. இதை எடுத்துக் காட்டுவதற்கு, வர்த்தக நெருக்கடிகளைப்பற்றிக் குறிப்பிட்டால் போதும். இவை சில ஆண்டுகளுக்கு ஒரு முறையாக மீண்டும் மீண்டும் வருகின்றன. ஒவ்வொரு முறையும், முந்தைய முறையைவிட அபாயகரமான ரீதியில், பூர்ஷ்வா சமூகம் முழுவதும் தொடர்ந்திருப்பதற்குச் சவால் விடுகிறது. இந்த நெருக்கடிகளில், முன்பே உற்பத்தியான பொருட்களின் பெரும்பகுதி மட்டுமல்ல, முன்பே சிருஷ்டிக்கப்பட்டுள்ள உற்பத்தி சக்திகளில் பெரும் பகுதியும் அவ்வப்பொழுது அழிக்கப்படுகின்றன. முந்தைய சகாப்தங்கள் அனைத்திலும் நகைப்புக்குரியனவாகத் தோன்றியிருக்கத் தகுந்த ஒரு தொத்துநோய், அமித உற்பத்தி என்ற தொத்துநோய், இந்த நெருக்கடிகளில் தோன்றுகிறது. தற்காலிகமான அநாகரீக நிலைக்குத்தான் பின் தள்ளப்பட்டிருப்பதைச் சமுதாயம் திடீரென்று பார்க்கிறது. ஏதோ ஒரு பஞ்சம், அல்லது எங்கும் வியாபித்த

ஒரு சர்வநாசப் போர், எந்த வாழ்க்கைத் தேவையும் கிடைக்காமல் செய்து விட்டதுபோல் தோன்றுகிறது. தொழிலும் வர்த்தகமும் அழிக்கப்படுவதாகப் புலப்படுகின்றன. ஏன்? ஏனென்றால் நாகரீகம் தேவையைவிட அதிகமாகிவிட்டது; வாழ்க்கைத் தேவைக்கான பண்டங்கள் அதிகப்படியாகிவிட்டன; தொழிலும் வர்த்தகமும் அளவை மீறிவிட்டன. சமுதாய உபயோகத்துக்குத் தகுதியாகவுள்ள உற்பத்தி சக்திகள், பூர்ஷ்வா உடைமையின் சூழ் நிலைகள் மேலும் முன்னேறுவதற்கு உதவவில்லை. அதற்கு மாறாக, அந்த உற்பத்தி சக்திகள் பூர்ஷ்வா உடைமைச் சூழ் நிலைகளை மீறும் அளவுக்கு வளர்ந்து விட்டன; அவற்றுக்கு பூர்ஷ்வா உடைமைச் சூழ்நிலைகள் தளைகளாகிவிட்டன. அந்த உற்பத்தி சக்திகள் இந்த விலங்குகளை மீறும்பொழுது, பூர்ஷ்வா சமூகம் முழுமையிலும் குழப்பம் ஏற்படுகிறது; பூர்ஷ்வா சொத்துரிமை நீடிப்பதற்கே ஆபத்து உண்டாகிறது. அவை உற்பத்தி செய்யும் செல்வத்தைத் தம்மிடம் அடக்கிக்கொள்வதற்கு பூர்ஷ்வா உடைமை நிலைமைகளால் முடியவில்லை; அவை அவ்வளவு குறுகலாயிருக்கின்றன. பூர்ஷ்வா வர்க்கம் இந்த நெருக்கடிகளை எப்படிப்போக்குகிறது? ஒரு புறத்தில், ஏராளமான உற்பத்தி சக்திகளைப் பலாத்காரமாக அழித்தும், மறுபுறத்தில், புதிய மார்க்கெட்டுகளை வென்றும் பழைய மார்க்கட்டுகளை ஒட்டச் சுரண்டியும், இந்த நெருக்கடிகளைச் சமாளிக்கிறது. அதாவது, மேலும் விரிவான, மேலும் அதிக நாசத்தை விளைவிக்கக் கூடிய நெருக்கடிகளுக்குப் பாதையைச் செப்பனிடுவதன்மூலம், நெருக்கடிகளைத் தடுப்பதற்கான வழிவகைகளைச் சுருக்கிக் கொள்வதன் மூலம், பூர்ஷ்வா வர்க்கம் நெருக்கடியைச் சமாளிக்கிறது.

எந்த ஆயுதங்களைக்கொண்டு பூர்ஷ்வா வர்க்கம் நிலப்பிரபுத்துவத்தை வெட்டி வீழ்த்தியதோ, அதே ஆயுதங்கள் இப்பொழுது பூர்ஷ்வா வர்க்கத்துக்கே எதிராகத் திருப்பப்படுகின்றன.

பூர்ஷ்வா வர்க்கம் தனக்கே அழிவைத் தேடும் ஆயுதங்களை வார்த்தெடுத்திருப்பது மட்டுமல்ல; அந்த ஆயுதங்களை உபயோகிக்க விருக்கும் மனிதர்களையும்—நவீனத் தொழிலாளி வர்க்கத்தையும் சிருஷ்டித்திருக்கிறது.

பூர்ஷ்வா வர்க்கம், அதாவது, மூலதனம், எந்த அளவுக்கு வளர்கிறதோ அதே அளவுக்கு நவீனத் தொழிலாளி வர்க்கமும் வளர்கிறது; இந்த வர்க்கத்தைச் சேர்ந்த உழைப்பாளிகள், வேலை கிடைக்கும்வரைதான் வாழமுடியும்; அவர்களுடைய உழைப்பு மூலதனத்தைப் பெருக்கும்வரையில்தான் அவர்கள் வேலையைக் காணமுடியும். தம்மைத்தாமே துண்டுதுண்டாகக் கொஞ்சங் கொஞ்சமாக விலைக்கு விற்கவேண்டிய நிலையிலுள்ள இந்த உழைப்பாளிகள், இதர வர்த்தகப் பண்டங்களைப்போலவே ஒரு பரிவர்த்தனைப் பண்டமாக விருக்கிறார்கள்; எனவே அவர்கள் போட்டா போட்டியின் சகலவிதமான ஏற்றத் தாழ்வுகளுக்கும், மார்க்கெட்டின் மாறுபாடுகள் அனைத்துக்கும் இலக்காகின்றனர்.

விஸ்தாரமான அளவில் யந்திரங்கள் பயன்படுவதாலும், ஒவ்வொரு வேலையும் பல பிரிவுகளாகப் பாகுபடுத்தப்பட்டு வேலைப் பிரிவு ஏற்பட்டிருப்பதாலும், தொழிலாளரின் வேலை, தன் தனித் தன்மை முழுவதையும் இழந்துவிட்டது; எனவே அந்த வேலையில் அவர்களுக்கிருந்த கவர்ச்சி முழுமையும் இல்லாதொழிந்துவிட்டது. தொழிலாளி யந்திரத்தோடு தொடுக்கப்பட்ட தொடர் பொருளாகிவிடுகிறான். அவனுடைய வேலையைச் செய்வதற்கு, அவனிடம் தேவைப்படும் சாமர்த்தியம், மிகவும் சாதாரணமானது; மிகவும் சுலபமாகப் பெறக்கூடியது; ஒரேமாதிரியானதாக விருப்பதால் மிகவும் அதிகமாக அலுப்புத் தட்டக்கூடியது. ஆகவே, அவனுடைய பராமரிப்புக்கும் அவனுடைய வம்ச விருத்திக்கும் அத்தியாவசியமான வாழ்க்கைத் தேவைகளாக தொழிலாளியின் உற்பத்திச் செலவு அநேகமாகக் குறுகிவிடுகிறது. ஆனால் ஒரு பரிவர்த்தனைப்பண்டத்தின் விலை, அதன் உற்பத்திச்செலவுக்குச் சமானமானது; எனவே, *உழைப்பு என்ற பரிவர்த்தனைப் பண்டத்தின் விலையும் அதன் உற்பத்திச்செலவுக்கே சமம். எனவே, வேலையின் வெறுப்பூட்டும் தன்மை அதிகரிக்கும் அளவில், கூலி குறைகிறது. அதுமட்டுமல்ல. யந்திர உபயோகமும் வேலைப் பிரிவினையும் எந்த அளவுக்கு அதிகரிக்கின்றனவோ, அந்த அளவுக்கு, வேலைநேர அதிகரிப்பின்மூலமோ, குறித்த நேரத்தி

* தொழிலாளி தன் உழைப்பை அல்ல. உழைப்பு சக்தியை விற்கிருன் என்பதை கார்ல் மார்க்ஸ் பின்னல் எடுத்துக்காட்டினர்—(ப-ர்).

லேயே கூடுதலாக வேலை வாங்குவதன்மூலமோ, யந்திரங்களின் வேகத்தை அதிகரிப்பதன்மூலமோ, இவைபோன்ற இதர வழி களிலோ உழைப்புச் சுமையும் அதிகரிக்கிறது.

முன்னர் தந்தைவழிக் குடும்ப எஜமானன் நடத்திவந்த சிறிய பட்டறையை, நவீனத் தொழில், ஆலை முதலாளியின் பெரிய பாக்டரியாக மாற்றிவிட்டது. ஏராளமான தொழிலாளிகள் பாக்டரியில் குவிக்கப்படுகிறார்கள், படைவீரர்களைப்போல அமைக் கப்படுகிறார்கள். தொழில் ராணுவத்தின் படைவீரர்கள் என்ற முறையில் அவர்கள், அதிகாரிகளும் சார்ஜண்டுகளுமடங்கிய நிர் வாகத்தின்கீழ், உயர்வு தாழ்வான பல தட்டுகளைக் கிரமமாகக் கொண்ட நிர்வாகத்தின்கீழ் வைக்கப்படுகிறார்கள். அவர்கள் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா அரசுக்கும் அடிமைகளா யிருப்பதுடன், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணியும், யந்திரத் தின் அடிமைகளாக்கப்படுகின்றனர்; மேற்பார்வை அதிகாரி களால் அடிமைகளாக்கப்படுகின்றனர்; எல்லாவற்றுக்கும் மேலாக தனிப்பட்ட பூர்ஷ்வாத் தொழிலதிபராலேயே அடிமைகளாக்கப் படுகின்றனர். லாபம் என்ற லட்சியத்தின்மீதே குறியாகவிருப்ப தாக இந்த எதேச்சாதிகாரம் எந்த அளவுக்கு வெளிப்படையாகப் பறைசாற்றுகிறதோ, அந்த அளவுக்கு அது மேலும் கேவலமான தாகிறது, வெறுக்கத்தக்கதாகிறது, மனம் நோகச் செய்கிறது.

உடலுழைப்பில் உள்ளடங்கியிருக்கும் திறமையும் பலப்பிர யோகமும் எந்த அளவுக்குக் குறைகின்றனவோ, அதாவது, யந்தி ரங்கள் எந்த அளவுக்கு அபிவிருத்தி அடைகின்றனவோ—அந்த அளவுக்கு, ஆண்களின் உழைப்பு நடந்த இடத்தைப் பெண் களின் உழைப்பு மேற்கொள்கிறது. தொழிலாளி வர்க்கம் சம்பந் தப்பட்டவரையில், வயது வித்தியாசத்துக்கும் ஆண் பெண் வித்தியாசத்துக்கும், சமுதாயத்தில் செல்லுபடியாகக்கூடிய விசேஷ அம்சம் எதுவும் கிடையாது. எல்லோரும் உழைப்புக் கருவிகள்; அவர்களை உபயோகிப்பதற்கான செலவுமட்டும், அவர் களுடைய வயதுக்கும் பாலுக்கும் தக்கபடி ஏற்றத்தாழ்வாக இருக்கும்.

பாக்டரி முதலாளி தொழிலாளியைச் சுரண்டுவது முடிந்த வுடன், தொழிலாளி தன் கூலியை ரொக்கமாகப் பெற்றுக்கொண்ட

வுடன், பூர்ஷ்வா வர்க்கத்தின் இதர பகுதிகள், வீட்டுச் சொந்தக்காரர், கடைக்காரர், கடன்கொடுத்தவர் முதலியோர் அவன்மேல் விழுந்து, அவனைப் பிடித்துக்கொள்கிறார்கள்.

மத்தியதர வர்க்கத்தின் அடித்தட்டுகளிலுள்ள சிறு வியாபாரிகள், கடைக்காரர்கள், வர்த்தகம் செய்து நிறுத்தியவர்கள், கைத்தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோர் அனைவரும் படிப்படியாகத் தாழ்த்தப்பட்டு, தொழிலாளி வர்க்க நிலையை அடைகின்றனர்; ஏனென்றால் இதற்கு முதலாவது காரணம்: நவீனத் தொழில் நடத்தப்படும் அளவுக்குத் தொழில் நடத்த, அவர்களுடைய மூலதனம் — சுருங்கிவரும் மூலதனம் — போதவில்லை; பெரிய முதலாளிகளுடைய போட்டிக்கு முன் அவர்களுடைய தொழில்கள் சேற்றில் புதையுண்டு விடுகின்றன. இரண்டாவது காரணம்: அவர்களுடைய விசேஷத் திறமைகளைப் புதிய பொருளுற்பத்தி முறைகள் பயனற்றவை யாக்கி விடுகின்றன. இவ்வாறாக, ஜனத் தொகையின் சகல வர்க்கங்களிலிருந்தும் ஆட்கள் திரட்டப்பட்டு, தொழிலாளி வர்க்கம் உருப்பெறுகிறது.

அதன் வளர்ச்சி பல்வேறு கட்டங்களைக் கொண்டதா யிருக்கிறது. அது பிறந்தவுடன், பூர்ஷ்வா வர்க்கத்துடன் அதற்குள்ள போராட்டம் ஆரம்பிக்கிறது. தங்களை நேரடியாகச் சுரண்டும் தனிப்பட்ட பூர்ஷ்வாக்களை எதிர்த்து, தொழிலாளர்கள் முதலில் தனித்தனியாகவும் பிறகு ஒரு பாக்டரியிலுள்ள தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்தும் அதன் பிறகு ஒரே வட்டாரத்தில் ஒரே தொழிலில் உள்ள தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்தும் போராடுகிறார்கள். அவர்கள் பொருளுற்பத்தியின் பூர்ஷ்வா சூழ்நிலைகள்மீது குறி வைத்துத் தாக்கவில்லை; உற்பத்திக் கருவிகளையே தாக்குகின்றனர். தமது உழைப்புடன் போட்டியிடும் இறக்குமதிப் பொருட்களை அவர்கள் அழிக்கிறார்கள். அவர்கள் யந்திரங்களைச் சுக்கு நூறாக உடைத்தெறிகிறார்கள்; பாக்டரிகளைத் தீயிட்டுக் கொளுத்துகிறார்கள்; இவ்வாறாக மத்திய காலத்தில் தொழிலாளி பெற்றிருந்த அந்தஸ்தை—இப்பொழுது மறைந்தொழிந்துவிட்ட அந்த அந்தஸ்தை—மீண்டும் ஸ்தாபிக்க பலாத்காரமான முறையில் முயற்சிக்கின்றனர்.

இந்தக் கட்டத்தில்கூடத் தொழிலாளர்கள் ஒருவரோடொரு வர் தொடர்பில்லாமல், தேசம் முழுவதும் சிதறிக் கிடக்கின்றனர், பரஸ்பரப் போட்டியால் பிளவுபட்டிருக்கின்றனர். அவர்கள் எங் காவது கொஞ்சம் அழுத்தமுள்ள அமைப்புகளில் ஒன்றுபட்டிருக் கிறார்களென்றால், அது அவர்கள் தங்களுடைய ஒற்றுமையின் அவசியத்தை உணர்ந்து உருவாக்கியதல்ல ; பூர்ஷ்வா வர்க்க ஒற்றுமையின் பலனாகும். பூர்ஷ்வா வர்க்கம், தன் சொந்த அரசி யல் லட்சியங்களை அடைவதற்காகத் தொழிலாளி வர்க்கம் முழு வதையும் இயங்கச் செய்யவேண்டிய கட்டாயத்துக்கு உட்படு கிறது ; மேலும், கொஞ்ச காலத்துக்கு, அவ்வாறு தொழிலாளி வர்க்கத்தை இயங்கச் செய்வதும் அதற்குச் சாத்தியமாகிறது. ஆகவே, இந்தக் கட்டத்தில், தொழிலாளர்கள் தமது சத்துருக் களுடன் போராடவில்லை ; தமது சத்துருக்களின் சத்துருக்களான, யதேச்சாதிகார முடியாட்சியின் மீதமிச்சங்கள், நிலச்சுவான்தார் கள், தொழிலுக்குப் புறம்பான பூர்ஷ்வாக்கள், குட்டி பூர்ஷ்வாக்கள் ஆகியோரை எதிர்த்துப் போராடுகின்றனர். இவ்வாறாக, சரித்திர பூர்வமான இயக்கம் முழுமையும் பூர்ஷ்வா வர்க்கத்தின் கையில் இருக்கிறது ; பெறப்பட்ட ஒவ்வொரு வெற்றியும் பூர்ஷ்வா வர்க் கத்துக்காக ஏற்பட்ட வெற்றியாக விருக்கிறது.

ஆனால் தொழில் வளர்ச்சியுடன்கூட,தொழிலாளிவர்க்கம் எண் ணிக்கையில் அதிகமாவதுடன், மென்மேலும் பெருந்திரள்களாகக் குவிக்கப்படுகிறது; அதன் பலம் வளர்கிறது ; அது தன் பலத்தை மேன்மேலும் அதிகமாக உணர்கிறது. யந்திரங்களின் உபயோகம் பல வேலைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகளைத் துடைத்தொழிப் பதற்கேற்றவாறு, அநேகமாக எல்லாவிடங்களிலும் அது ஒரே குறைந்த மட்டத்துக்குச் சம்பளத்தைக் குறைப்பதற் கேற்றவாறு, தொழிலாளி வர்க்க அணிகளிலிருந்த பல்வேறு நலன்களும் வாழ்க்கை நிலைமைகளும் மேன்மேலும் சரி சமமாக்கப்படுகின்றன. பூர்ஷ்வாக்களிடையே போட்டி வளர்வதாலும், அதன் பலனான வர்த்தக நெருக்கடிகளாலும், தொழிலாளர்களின் சம்பளம், மேன் மேலும் அதிகமாக ஏற்ற இறக்கத்துக்கு உட்படுகிறது. யந்திரங் கள் மேன்மேலும் வேகமாக அபிவிருத்தியடைந்து, அவர்களு டைய ஜீவனத்தை மேன்மேலும் நிலையற்றதாக்குகின்றன. தனித்

தனித்தொழிலாளிகளுக்கும்தனித்தனி பூர்ஷ்வாக்களுக்குமிடையே ஏற்பட்ட மோதல்கள், இரு வர்க்கங்களுக்கிடையே நடைபெறும் மோதல்களின் தன்மையை மேன்மேலும் அடைகின்றன. அதனுல் தொழிலாளர்கள், பூர்ஷ்வாக்களுக்கு எதிராகக் கூட்டு சேர்கின்றனர் (தொழிற் சங்கங்கள்); கூலி விகிதத்தைக் குறையாமல் பாதுகாப்பதற்காக அவர்கள் ஒன்றுசேர்கிருர்கள்; இந்த மாதிரிக் கிளர்ச்சிகள் ஏற்படும் சந்தர்ப்பங்களில் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, முன்னேற்பாடாக, நிரந்தரமான சங்கங்களை நிறுவிக்கொள்கின்றனர். அங்கும் இங்கும் இந்தப் போராட்டம் கலகங்களாக வெடிக்கிறது.

சிலசமயங்களில் தொழிலாளர்கள் வெற்றியடைகிருர்கள்; அதுவும் தற்காலிகமான வெற்றியே. அவர்களுடைய போராட்டங்களின் உண்மையான பலன் உடனடியான விளைவில் அடங்கியிருக்கவில்லை; தொழிலாளரின் ஒற்றுமை இடைவிடாமல் விரிவடைந்துகொண்டிருப்பதிலேயே அடங்கியிருக்கிறது. நவீனத் தொழில் படைத்திருக்கும் போக்குவரத்துச் சாதன வசதி, இந்த ஒற்றுமை உருப்பெறுவதற்கு உதவுகிறது. அந்தப் போக்குவரத்து வசதி, பல்வேறு ஸ்தலங்களிலுள்ள தொழிலாளர்கள் பரஸ்பரத் தொடர்புகொள்ளச் செய்கிறது. ஒரே தன்மையைக் கொண்டு நிகழ்ந்த எண்ணற்ற ஸ்தலப் போராட்டங்களை, வர்க்கங்களுக்கிடையே நடைபெறும் தேசீயப் போராட்டமாக ஒரு மையப்படுத்துவதற்கு இந்தத் தொடர்புதான் தேவையாயிருந்தது. ஆனுல் ஒவ்வொரு வர்க்கப் போராட்டமும் ஒரு அரசியல் போராட்டமாகும். எந்த ஒற்றுமையை ஏற்படுத்திக்கொள்வதற்கு, சாலைகள் மோசமாயிருந்த காரணத்தால், மத்தியகால நகரத்தார்களுக்குப் பல நூற்ருண்டுகள் பிடித்ததோ, அதே ஒற்றுமையை ரயில் பாதைகளின் உதவியைக்கொண்டு நவீனத் தொழிலாளர்கள் சில ஆண்டுகளில் சாதித்து விட்டார்கள்.

இவ்வாறு தொழிலாளர்கள் தங்களை ஒரு வர்க்கமாக அமைத்துக்கொள்வதும், அதன் பலனுக ஒரு அரசியல் கட்சியாக அமைத்துக்கொள்வதும், தொடர்ந்தாற்போல நிலைகுலைந்து கொண்டிருக்கிறது; இதற்கு தொழிலாளர்கள் மத்தியிலேயே நடைபெறும் போட்டிதான் காரணம். ஆனுலும், மீண்டும் மீண்டும், முன்னை

விட பலமும் உறுதியும் கூடுதலாகப் பெற்று, அந்த ஒற்றுமை எழுச்சி பெற்றுக்கொண்டேயிருக்கிறது. அது பூர்ஷ்வா வர்க்கத்தினர் மத்தியிலேயே உள்ள பிளவுகளைப் பயன்படுத்திக்கொண்டு, தொழிலாளரின் குறிப்பிட்ட நலன்களுக்குச் சட்டபூர்வமான அங்கீகாரம் அளிக்கும்படி கட்டாயப்படுத்துகிறது. இவ்வாருகவே, இங்கிலாந்து தேசத்தில் பத்து மணி வேலை நேர மசோதா நிறைவேற்றப்பட்டது.

மொத்தமாகப் பார்த்தால், பழைய சமூகத்தின் வர்க்கங்களுக்கிடையே நடைபெறும் மோதல்கள், பல வழிகளில் தொழிலாளி வர்க்க வளர்ச்சிக்கு உதவுகின்றன. பூர்ஷ்வா வர்க்கம், இடைவிடாத ஒரு போராட்டத்தில், தான் சிக்கியிருப்பதைப் பார்க்கிறது; முதலில் அது பிரபுக்களுடன் போராடவேண்டியிருந்தது; பிறகு, தொழில் வளர்ச்சிக்கு விரோதியாகிவிட்ட பூர்ஷ்வா வர்க்கப் பகுதிகளுடன் போராடவேண்டியிருந்தது; எப்பொழுதுமே, அன்னிய தேசங்களின் பூர்ஷ்வா வர்க்கத்துடன் போராடவேண்டியிருக்கிறது. இந்தப் போராட்டங்களிலெல்லாம், அது தொழிலாளி வர்க்கத்துக்கு வேண்டுகோள் விடுத்து, அதன் உதவியைக் கோரவேண்டியிருக்கிறது; இவ்வாருக, தொழிலாளி வர்க்கத்தை அரசியல் அரங்குக்கு இழுத்துக்கொண்டு வரவேண்டியிருக்கிறது. ஆகவே, பூர்ஷ்வா வர்க்கமே தொழிலாளிவர்க்கத்துக்கு அதன் அரசியல் கல்வியின் அம்சங்களையும் பொதுக் கல்வி அம்சங்களையும் அளிக்கிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதெனில், பூர்ஷ்வா வர்க்கம், தன்னை எதிர்த்துப் போராடுவதற்கான ஆயுதங்களைத் தொழிலாள வர்க்கத்துக்கு அளிக்கிறது.

மேலும், நாம் முன்பே பார்த்த மாதிரி, ஆளும் வர்க்கங்களின் பகுதிகள், தொழில் வளர்ச்சியின் பலனுக, தொழிலாளி வர்க்க அணிக்குள் எறியப்படுகின்றனர் அல்லது தொழிலாளி வர்க்க வாழ்க்கை நிலைமைகளுக்கு உள்ளாகும் அபாயத்தால் அச்சுறுத்தப்படுகின்றனர். இவையும் தொழிலாளி வர்க்கத்துக்குப் புதிய அறிவு அம்சங்களையும் முற்போக்கு அம்சங்களையும் அளிக்கின்றன.

இறுதியாக வர்க்கப்போராட்டம் தீர்மானமான நேரத்தை அணுகும்பொழுது, ஆளும் வர்க்கத்துக்குள், மெய்யாகவே பழைய

சமூகம் முழுமையிலுமே, சிதைந்து கரையும் நிகழ்ச்சி வெகு உக்ர மாகவும் பட்டவர்த்தனமாகவும் நடைபெறுகிறது; அப்பொழுது, ஆளும் வர்க்கத்தில் ஒருசிறு பகுதி தன்னைத் துண்டித்துக் கொண்டு, எதிர்காலத்தைத் தன் கையில் வைத்திருக்கும் புரட்சி வர்க்கத்துடன் சேர்கிறது. ஆகவே, முந்தைய காலகட்டத்தில், பிரபுக்களில் ஒரு பகுதி பூர்ஷ்வாவர்க்கத்தின் பக்கம் சென்றதைப் போல, இப்பொழுது, பூர்ஷ்வா வர்க்கத்தின் ஒரு பகுதி தொழி லாளி வர்க்கத்தின் பக்கம் போகிறது. குறிப்பாக, பூர்ஷ்வா தத்துவ ஞானிகளில் ஒரு பகுதியினர் சரித்திர இயக்கத்தை முழுமையாகப் பார்த்துத் தத்துவரீதியில் புரிந்துகொள்ளும் அளவுக்குத் தங்கள் தரத்தை உயர்த்திக் கொண்டவர்கள், தொழிலாளிவர்க்கத்தின் பக்கம் போகின்றனர்.

இன்று பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராக நேருக்குநேர் நிற் கும் சகல வர்க்கங்களிலும், தொழிலாளி வர்க்கம் மட்டுமே உண் மையில் புரட்சிகரமானது. இதர வர்க்கங்கள் நவீனத் தொழிலுக்கு முன்னால் க்ஷீணிக்கின்றன, இறுதியில் மறைகின்றன; தொழிலாளி வர்க்கமோ அந்த நவீனத் தொழிலின் பிரத்தியேகமான விளைவுப் பொருளாகும்; முக்கியமான விளைவுப் பொருளாகும்.

மத்தியதர வர்க்கத்தின் அடித்தட்டுகளிலுள்ளவர்கள் சிறிய தொழில் முதலாளி, கடைக்காரர், கைத்தொழிலாளி, விவசாயி ஆகி யோரனைவரும், மத்தியதர வர்க்கப் பகுதிகளென்ற முறையிலுள்ள தமது வாழ்வை அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காக பூர்ஷ்வா வர்க்கத்தை எதிர்த்துப் போராடுகின்றனர். எனவே, அவர்கள் புரட்சிகரமான வர்களல்ல; உள்ளதைப் பாதுகாக்க விரும்புகிற வர்கள். அதுமட்டுமல்ல, அவர்கள் பிற்போக்காளர்களுமாவர்; ஏனெனில், சரித்திரத்தின் சக்கரத்தைப் பின் தள்ளுவதற்கு அவர்கள் முயல்கின்றனர். ஏதோ தற்செயலாக அவர்கள் புரட்சி கரமானவர்களாக இருக்கிறார்களென்றால், அதற்குக் காரணம், அவர்கள் விரைவில் தொழிலாளி வர்க்க உறுப்பினர்களாகப் போகிறார் என்பதுதான். எனவே, அவர்கள் புரட்சிகரமானவர் களாகச் செயல்படும்பொழுது, தமது நிகழ்கால நலன்களைப் பாது காக்கவில்லை. எதிர்கால நலன்களைப் பாதுகாக்கிறார்கள். அவர்கள்

தொழிலாளி வர்க்கத்தின் கருத்தோட்டத்தைப் பெறும்பொருட்டுத் தமது சொந்தக் கருத்தோட்டத்தைக் கைவிடுகின்றனர்.

பழைய சமூகத்தின் அடித்தட்டுகளால் விசிறி எறியப்பட்டு, செயலற்ற வகையில் அழுகிக்கொண்டிருக்கும், சமூகக் கழிவு—'அபாயகரமான வர்க்கம்'—இங்கும் அங்கும் தொழிலாளி வர்க்கப் புரட்சியால் இயக்கத்துக்குள் இழுக்கப்படலாம்; எனினும், அதனுடைய வாழ்க்கை நிலைமைகள், பிற்போக்கான சூழ்ச்சியின் கைக்கூலியாகவே, லஞ்சம் வாங்கிச் செயல்படும் கருவியாகவே, அதைப் பக்குவப்படுத்துகிறது.

ஏற்கனவேயே, தொழிலாளி வர்க்க வாழ்க்கை நிலைமைகளில், பழைய சமூகத்தின் வாழ்க்கை நிலைகள் கவிழ்ந்து புதைக்கப்பட்டு விட்டன. தொழிலாளிக்குச் சொத்து கிடையாது; அவனுடைய மனைவியிடமும் குழந்தைகளிடமும் அவனுக்குள்ள உறவுக்கும் பூர்ஷ்வா குடும்ப உறவுகளுக்கும் பொதுவான அம்சம் எதுவுமில்லை. நவீனத் தொழிலின் உழைப்பும் மூலதனத்துக்குக் கீழ்ப்படும் நவீன கால அடிமைத்தனமும், பிரான்ஸிலிருப்பதைப் போலவே இங்கிலாந்திலும், ஜெர்மனியிலிருப்பதைப் போலவே அமெரிக்காவிலும் இருப்பதால், அது தொழிலாளியிடமிருந்து அவனுடைய தேசீயப் பண்பின் கடைசிச் சாயையைக்கூட உரித்து எடுத்துவிட்டது. அந்தத் தொழிலாளிக்குச் சட்டம், ஒழுக்கம், மதம் ஆகியவை அத்தனையும் பூர்ஷ்வாக்களுடைய துராசைகளாகவே காட்சியளிக்கின்றன; அவற்றுக்குப் பின்னால் அத்தனை பூர்ஷ்வா நலன்களும் பதுங்கிக்கொண்டிருக்கின்றன.

முன்னாட்களில் மேலாதிக்கம் பெற்ற வர்க்கங்களெல்லாம், தாங்கள் உற்பத்திப் பொருட்களைச் சுவாதீனப்படுத்திக்கொள்வதற்குத் தேவையான சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு சமுதாயத்தையே உட்படுத்துவதின் மூலம், தாங்கள் முன்னரே பெற்றுள்ள அந்தஸ்துக்கு அரண் செய்துகொண்டனர். ஆனால், தொழிலாளர்கள், சமுதாயத்தின் உற்பத்தி சக்திகளுக்கு எஜமானர்களாக வேண்டுமானால், தாங்கள் முன்னால் எந்த முறையில் பொருட்களைப் பெற்றனரோ, அந்த முறைக்கு முடிவுகட்டுவதைத் தவிர வேறு வழி கிடையாது. அவ்வாறு செய்வதன்மூலம், முன்ன

லிருந்த சகலவிதமான உற்பத்திப்பொருள் சுவாதீன முறைகளுக்கும் அவர்கள் முடிவுகட்டியாகவேண்டும். தங்களுடையதென்று பத்திரப்படுத்தி உறுதிப்படுத்துவதற்கு அவர்களிடம் ஒன்றும் கிடையாது; முன்ஞல், தனிநபர் சொத்துரிமைக்குப் பாதுகாப்புகளாகவும் உத்திரவாதங்களாகவும் இருந்த சகல ஏற்பாடுகளேயும் தகர்ப்பதே அவர்களுடைய அவதாரப் பணி.

இதற்குமுன் நடைபெற்ற சரித்திரரீதியான இயக்கங்கள் அனைத்தும், சிறுபான்மையோர் பங்குகொண்ட இயக்கங்களாகவோ, சிறுபான்மையோரின் நலனுக்காக நடந்த இயக்கங்களாகவோதான் இருந்தன. தொழிலாளி வர்க்க இயக்கமோ மிகப் பெரும்பான்மையோர் சுய உணர்வுடன் நடத்தும் சுயேச்சையான இயக்கம்; மிகப்பெரும்பான்மையோருடைய நலனுக்காக நடைபெறும் இயக்கம். நமது நிகழ்கால சமூகத்தின் அடித்தட்டிலுள்ள தொழிலாளி வர்க்கம், மேலே சுமத்தப்பெற்றுள்ள அதிகாரபூர்வமான சமூகத்தின் சகல தட்டுகளேயும் பூர்ணமாகத் தூக்கி எறியாமல், தன்னைத்தானே அசைத்துக்கொள்ளவும் உயர்த்திக்கொள்ளவும் முடியாது.

பூர்ஷ்வா வர்க்கத்துடன் தொழிலாளி வர்க்கம் நடத்தும் போராட்டமானது, முதன்'முதலில், உட்பொருளில் இல்லாவிட்டாலும் உருவத்தில், ஒரு தேசீயப் போராட்டமாகவிருக்கிறது. ஒவ்வொரு நாட்டின் தொழிலாளி வர்க்கமும் முதன்முதலில் தத்தம் நாட்டு பூர்ஷ்வா வர்க்கத்துடன்தான் கணக்குத் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

தொழிலாளி வர்க்க வளர்ச்சியின் மிகப்பொதுவான பருவங்களை நாம் இங்குச் சித்தரிக்கும்பொழுது, தற்காலச் சமூகத்தில் ஏறக்குறைய மறைமுகமாக நடைபெற்றுவரும் உள்நாட்டு யுத்தத்தை நாம் வர்ணித்தோம்; அது பகிரங்கமான புரட்சியாக வெடித்து, பூர்ஷ்வா வர்க்கத்தைப் பலாத்காரமாக வீழ்த்தி, தொழிலாளி வர்க்க ஆட்சிக்கு அஸ்திவாரம் இடும் தருவாய்வரை, நாம் வர்ணித்தோம்.

ஒடுக்கும் வர்க்கங்களுக்கும், ஒடுக்கப்படும் வர்க்கங்களுக்குமிடையேயுள்ள விரோதத்தின் அடிப்படையிலேயே இதுவரை

ஒவ்வொரு சமூக அமைப்பும் ஏற்பட்டிருந்ததென்பதை நாம் முன்பே பார்த்தோம். ஆனால், ஒரு வர்க்கத்தை ஒடுக்கவேண்டுமானால், ஒடுக்குமுறைக்கு ஆளாகும் வர்க்கம் தன் அடிமை நிலையிலாவது நீடித்து வாழ்வதற்குச் சில நிலைமைகள் உத்திரவாதம் செய்யப்படவேண்டும். நிலப்பிரபுத்துவ யதேச்சாதிகார நுகத்தடிக்கு உட்பட்டிருந்த குட்டி பூர்ஷ்வா, பூர்ஷ்வாவாக வளர்வதில் வெற்றி கண்டதைப்போல, பண்ணை அடிமைத்தனம் நிலவிய காலத்தில், பண்ணை அடிமை, நகரத்தார் சமூக உறுப்பினனாகத் தன்னைத்தானே உயர்த்திக்கொண்டான். அதற்கு மாறாக, நவீன காலத்தின் தொழிலாளி, தொழில் வளர்ச்சியுடன் உயர்வதற்குப் பதிலாக தன் வர்க்கம் தொடர்ந்து வாழ்வதற்கு அத்தியாவசியமான நிலைமைகளுக்கும் கீழே தாழ்வடைகிறான். அவன் ஒன்றுமில்லாதவனாகிறான். ஜனத்தொகை, செல்வம் ஆகியவற்றைவிட இல்லாக் கொடுமை வேகமாகப் பெருகுகிறது. இங்குதான் ஒரு உண்மை பட்டவர்த்தனமாகிறது. பூர்ஷ்வா வர்க்கம் சமூகத்தின் ஆளும் வர்க்கமாகவிருப்பதற்கும், தன் வாழ்க்கை நிலைமைகளை, அனைத்தையும் மீறக்கூடிய சட்டமாகச் சமூகத்தின்மீது திணிப்பதற்கும், அதற்கு இனித் தகுதியில்லையென்பது பட்டவர்த்தனமாகிறது. பூர்ஷ்வா வர்க்கம் ஆட்சி புரியும் தகுதியை இழந்துவிட்டது; ஏனென்றால், தன் அடிமை, அடிமை நிலையில் வாழ்வதற்குக்கூட அது உறுதியளிக்க முடியவில்லை; தன் அடிமையிடம் போஷணை பெறுவதற்குப் பதிலாக, அவனுக்கே உணவு அளிக்க வேண்டிய நிலைக்கு அவன் தாழ்ந்து அமிழ்ந்துவிடுவதை, அது தடுக்க முடியவில்லை. இந்த பூர்ஷ்வா வர்க்கத்தின்கீழ் இனிச் சமுதாயம் வாழ முடியாது. வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், இனிமேல், சமுதாயமும் பூர்ஷ்வா வர்க்க வாழ்வும் ஒன்றோடொன்று இணங்கிப் போக முடியாது.

பூர்ஷ்வா வர்க்கத்தின் வாழ்வுக்கும் ஆதிக்கத்துக்கும் அடிப்படையான நிபந்தனை என்னவென்றால், மூலதனம் உருப்பெற்று பெருகிக்கொண்டிருக்கவேண்டும்; இந்த மூலதனத்துக்கு அவசியமான நிபந்தனை கூலி உழைப்பு; இந்தக் கூலி உழைப்பு, தொழிலாளருக்கிடையிலுள்ள போட்டியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. பூர்ஷ்வா வர்க்கம் எண்ணித் துணியாதபடி

இயல்பாகவே, தொழில் வளர்ச்சியைச் சாதிக்கிறது; இதன் பலன் என்ன? போட்டியால் சிதறுண்டிருந்த தொழிலாளர்கள் சேர்க்கையின் மூலம் புரட்சிகரமான ஒற்றுமையைப் பெறுகிறார்கள். எனவே, பூர்ஷ்வா வர்க்கம் பொருட்களை உற்பத்தி செய்து சுவாதீனப்படுத்திக்கொள்வதற்காகவுள்ள அஸ்திவாரத்துக்கே, நவீனத் தொழில் வளர்ச்சி குழி பறிக்கிறது. எனவே, எல்லாவற்றுக்கும் மேலாக, பூர்ஷ்வா வர்க்கம் எதை உற்பத்தி செய்கிறது? தனக்குச் சவக்குழி தோண்டுகிறவர்களையே. அதன் வீழ்ச்சி, தொழிலாளி வர்க்கத்தின் வெற்றி ஆகிய இரண்டுமே தவிர்க்க முடியாதவையாகும்.

## 2. தொழிலாளர்களும் கம்யூனிஸ்டுகளும்

மொத்தமாக, தொழிலாளர் அனைவருடனும் கம்யூனிஸ்டு களுக்குள்ள உறவு எத்தகையது?

கம்யூனிஸ்டுகள் இதர தொழிலாளி வர்க்கக் கட்சிகளுக்கு எதிராக ஒரு தனிக்கட்சி அமைக்கவில்லை.

தொழிலாளி வர்க்க முழுமையின் நலன்களிலிருந்து வேறுபட்ட, அந்த நலன்களுக்குப் புறம்பான, நலன்கள் ஒன்றும் கம்யூனிஸ்டுகளுக்குக் கிடையாது.

தொழிலாளி வர்க்க இயக்கத்தை உருவாக்கி வார்த்தெடுப்பதற்காக, அவர்கள் தமக்கே உரித்தான எத்தகைய *செக்டேரியன் கோட்பாடுகளையும் நிறுவவில்லை.

தொழிலாளி வர்க்கத்தின் இதர கட்சிகளிடமிருந்து கம்யூனிஸ்டுகளைப் பிரித்துக் காட்டும் குணவிசேஷங்கள் கீழ்க்கண்டவை மட்டுமேயாகும்: எந்த தேசிய இனத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் சரி, வெவ்வேறு நாடுகளில் தொழிலாளர்கள் நடத்தும் தேசியப் போராட்டங்களில், தொழிலாளி வர்க்கம் முழுமைக்கும் உள்ள பொதுவான நலன்களை அவர்களை சுட்டிக் காட்டுகிறார்கள்: முன்னணிக்குக்கொண்டு வருகிறார்கள். பூர்ஷுவா வர்க்கத்துக்கு எதிராகத் தொழிலாளி வர்க்கம் நடத்தும் போராட்டம் பல்வேறு கட்டங்கள் வழியாக வளரும்பொழுது, அவர்கள் எங்கும் எப்பொழுதும் இயக்க முழுமையின் நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறார்கள்.

எனவே ஒருபுறத்தில் நடைமுறையில் பார்த்தால் கம்யூனிஸ்டுகள் ஒவ்வொரு நாட்டிலுமுள்ள தொழிலாளி வர்க்கக் கட்சிகளில் மிகவும் முற்போக்கான, மிகவும் உறுதியான பகுதியாக விளங்குகின்றனர். இதரர்கள் அனைவரையும் முன்னுக்கு உந்தித் தள்ளுகிற பகுதியாக விருக்கின்றனர். மறுபுறத்தில் தத்து

* செக்டேரியன்: தம்மைத் தாமே தனிமைப் படுத்திக்கொள்ளும் சொந்த வழியை வகுத்துக்கொண்டு செயல்படும் குறுகிய போக்குள்ளக் கொள்கை. (மொ-ர்)

வத்துறையில் பார்த்தால், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முன்னேற்றப் பாதையையும் சூழ்நிலைகளையும் இறுதியில் ஏற்படும் பொது விளைவுகளையும் தெளிவாகப் புரிந்துகொண்டிருக்கும் அனுகூலத்தை - பெரும் பகுதித் தொழிலாளருக்கு இல்லாத அனுகூலத்தை - அவர்கள் பெற்றுள்ளனர்.

கம்யூனிஸ்டுகளின் உடனடி நோக்கம் மற்றெல்லாத் தொழிலாளிவர்க்கக் கட்சிகளுடையதேதான்; தொழிலாளர்களை ஒரு வர்க்கமாக உருவாக்குவது, பூர்ஷ்வா வர்க்கத்தின் மேலாதிக்கத்தை வீழ்த்துவது, தொழில ாளி வர்க்கம் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவது ஆகியவைதான்.

அனைத்தையும் சீர்திருத்தப் போவதாகக் கூறும் ஒருவரோ இன்னொருவரோ, யுக்தி செய்தோ கண்டுபிடித்தோ முன்வைக்கும் கருத்துக்களையோ கோட்பாடுகளையோ, கம்யூனிஸ்டுகளின் தத்துவ முடிவுகள் எவ்வகையிலும் அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை.

நம் கண்ணெதிரே நிகழ்ந்துகொண்டிருக்கும் வரலாற்று வழிவந்த இயக்கத்திலிருந்து, முன்பே நடைபெற்றுக்கொண்டிருக்கும் வர்க்கப் போராட்டத்திலிருந்து தோன்றும் யதார்த்த உறவுகளையே அந்தத் தத்துவ முடிவுகள், பொதுப்படையான வாசகங்களில் எடுத்துக் கூறுகின்றன. இருக்கின்ற உடைமை உறவுகளை ஒழிப்பதென்பது கம்யூனிஸத்தின் அலாதியான அம்சமாக இருக்கவேயில்லை.

சரித்திர ரீதியான நிலைமைகள் மாறுவதின் விளைவாக ஏற்படும் சரித்திர ரீதியான மாறுதல்களுக்குக் கடந்த காலத்தின் உடைமை உறவுகள் அனைத்தும் தொடர்ந்தாற்போல் உட்படடிருந்தன.

உதாரணமாகப் பிரஞ்சுப் புரட்சி, பூர்ஷ்வா உடைமைக்குச் சாதகமாக, பிரபுத்துவ உடமையை ரத்து செய்தது.

பொதுப்படையாக உடைமையை ஒழிப்பது என்பது அல்ல, பூர்ஷ்வா உடைமையை ஒழிப்பது என்பதே கம்யூனிஸத்தின் விசேஷ அம்சமாகும். ஆனல் சிலர் பலரைச் சுரண்டுவதை,

வர்க்க விரோதங்களை அடிப்படையாகக் கொண்டு பொருட்களை உற்பத்தி செய்து சுவாதீனப்படுத்திக்கொள்ளும் ஏற்பாட்டின் இறுதியான, மிகவும் பூர்ணமான பிரதிபலிப்பாக, நவீன பூர்ஷ்வா தனிச் சொத்துரிமை இருக்கிறது.

இந்தக் கருத்தில், கம்யூனிஸ்டுகளின் தத்துவத்தை, தனி உடைமை ஒழிப்பு என்ற சொற்றொடரில் சுருக்கிக் கூறிவிடலாம்.

தன் சொந்த உழைப்பின் பலனைச் சொத்து சேகரித்துக் கொள்வதற்கு ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டென்றும், அந்தச் சொத்துதான் எல்லா வகையான தனிநபர் சுதந்திரத்துக்கும் செயலூக்கத்துக்கும் சுயேச்சைக்கும் அடிப்படையென்றும் அந்தச் சொத்துச் சேகரிப்பு உரிமையை ஒழிக்க நாங்கள் ஆசைப்படுவதாகவும் கம்யூனிஸ்டுகளாகிய எங்கள்மீது குற்றஞ் சாட்டப்படுகிறது.

என்ன சொத்து! கஷ்டப்பட்டு உழைத்துச் சேர்த்தது! தானைச் சம்பாதித்தது! நீங்கள் எந்தச் சொத்தை இவ்வாறு குறிப்பிடுகிறீர்கள்? சாதாரணக் கைத்தொழிலாளி, சாதாரண விவசாயி ஆகியோரின் சொத்தை—பூர்ஷ்வா உரிமைக்கு முன்பிருந்த அந்தச் சொத்தைக் குறிப்பிடுகிறீர்களா? அதை ஒழிக்க வேண்டிய அவசியமில்லை; முன்பே தொழில் வளர்ச்சி அதைப் பெரிய அளவுக்கு அழித்துவிட்டது; இப்பொழுதும் தினசரி அதை அழித்துக்கொண்டிருக்கிறது.

அல்லது நவீன பூர்ஷ்வா தனி உடைமையை நீங்கள் குறிப்பிடுகிறீர்களா?

ஆனல் கூலி-உழைப்பு, தொழிலாளிக்கு ஏதாவது உடைமையைச் சிருஷ்டிக்கிறதா? கொஞ்சங்கூடக் கிடையாது. கூலி உழைப்பு மூலதனத்தைச் சிருஷ்டிக்கிறது. அதாவது, கூலி உழைப்பைச் சுரண்டும் வகையைச் சேர்ந்த உடைமையை; புதிதாகச் சுரண்டுவதற்குப் புதிய கூலி-உழைப்பைப் பெருமல் தன்னைப் பெருக்கிக்கொள்ள முடியாத உடைமையை, கூலி-உழைப்பு சிருஷ்டிக்கிறது.

உடைமையின் இன்றைய வடிவத்தில் பார்த்தால், அந்த உடைமை, மூலதனம் கூலி உழைப்பு ஆகியவற்றுக்கு இடையே

யுள்ள பகையை அடிப்படையாகக் கொண்டது. இந்தப்பகையின் இரண்டு பக்கங்களையும் நாம் பரிசீலனை செய்வோம்.

ஒருவன் முதலாளியாக இருக்கவேண்டுமானால், அவனுக்குப் பொருளுற்பத்தியில் தனக்கே உரித்தான சொந்த அந்தஸ்து இருப்பதுடன் ஒரு சமூக அந்தஸ்தும் இருக்கிறது. மூலதனம் என்பது ஒரு கூட்டு விளைவுப் பொருள். சமூதாயத்தின் பல உறுப்பினர்கள் கூட்டு நடவடிக்கை எடுத்தால்தான், இன்னும் சொல்லப் போனால், இறுதியாக, சமுதாயத்தின் சகல உறுப்பினர்களும் கூட்டு நடவடிக்கை எடுத்தால்தான், மூலதனத்தை இயங்க வைக்கமுடியும்.

ஆகவே மூலதனம் என்பது தனி மனிதனால் இயங்கும் தனி மனிதன் சக்தியல்ல; அது சமுதாயத் தன்மை கொண்ட ஒரு சமூக சக்தி.

எனவே, மூலதனத்தைப் பொது உடைமையாக மாற்றும் பொழுது, சகல சமுதாய உறுப்பினர்களுக்கும் சொந்தமான சொத்தாக மாற்றும்பொழுது, அதன்மூலம் தனிமனிதன் சொத்து சமூக சொத்தாக மாற்றப்படவில்லை, உடைமையின் சமுதாயத் தன்மைதான் மாற்றப்படுகிறது. அது தன் வர்க்கத் தன்மையை இழந்துவிடுகிறது.

இப்பொழுது கூலி உழைப்பைப் பரிசீலனை செய்வோம்.

கூலி உழைப்பின் சராசரி விலை குறைந்தபட்சக் கூலியாகும்; அதாவது உழைப்பாளி உழைப்பாளியாக மட்டும் உயிர் வாழ்வதற்கு அத்தியாவசியமாகவுள்ள வாழ்க்கைத் தேவைகளின் அளவு எவ்வளவோ அவ்வளவுதான். எனவே, கூலி உழைப்பாளி தன் உழைப்பு மூலம் தனக்குப் பெற்றுக்கொள்வதெல்லாம், அவன் உயிரோடு வாழ்ந்து வம்ச விருத்தி செய்வதற்கு மட்டுமே போதும் போதாததாயிருக்கிறது. இவ்வாறு உழைப்பின் விளைவுப் பொருட்களைத் தனிப்பட்டவர்கள் சுவீகரித்துக் கொள்வதை, மனித வாழ்வின் பராமரிப்புக்காகவும் வம்ச விருத்திக்காகவும் சுவீகரித்துக் கொள்வதை, மற்றவர் உழைப்பின்மீது ஏவல் புரிவதற்கு எத்தகை உபரியையும் அளிக்காதவாறு சுவீகரித்துக்கொள்வதை ஒழிக்க வேண்டுமென்று நாங்கள் ஒருக்காலும் விரும்பவில்லை. இவ்வாறு

சுவீகரித்துக் கொள்வதிலுள்ள கேவலமான தன்மையைத்தான் நாங்கள் ஒழிக்க விரும்புகிறோம். மூலதனத்தைப் பெருக்குவதற்காக மட்டும் தொழிலாளி வாழவேண்டுமென்றும் ஆளும் வர்க்கத்தின் நலனுக்குத் தேவைப்படும் வரையில்தான் தொழிலாளி வாழ்வதற்கு அனுமதிக்கப்பட வேண்டுமென்றுமுள்ள கேவலமான தன்மையைத்தான் நாங்கள் ஒழிக்க விரும்புகிறோம்.

பூர்ஷ்வா சமூகத்தில், ஜீவனுள்ள உழைப்பு சேமிக்கப்பட்டுள்ள *உழைப்பைப் பெருக்கும் சாதனமாக மட்டும் பயன்படுகிறது. கம்யூனிஸ்ட் சமூகத்தில், உழைப்பாளியின் வாழ்வை விசாலப்படுத்திச் செழுமைப்படுத்தி உயர்த்தும் சாதனமாகவே சேமிக்கப்பட்டுள்ள உழைப்பு பயன்படும்.

எனவே, பூர்ஷ்வா சமூகத்தில், கடந்த காலம் நிகழ்காலத்தின் மீது ஆதிக்கம் வகிக்கிறது; கம்யூனிஸ்ட் சமூகத்தில், நிகழ்காலம் இறந்த காலத்தின் மீது ஆதிக்கம் வகிக்கிறது. பூர்ஷ்வா சமூகத்தில் மூலதனம் சுயேச்சையாகத் தனக்கே உரித்தான தன்மையுடன் விளங்குகிறது; ஆனால் உயிர் வாழும் நபர் சார்ந்திருப்பவனாக இருக்கிறான்; தனக்கே உரித்தான தன்மையில்லாதவனாக இருக்கிறான்.

இந்த நிலைமையை ஒழிப்பதைத்தான் தனித் தன்மையையும் சுதந்திரத்தையும் ஒழிப்பதாகுமென்று பூர்ஷ்வாக்கள் கூறுகின்றனர்! அதுவும் சரிதான். பூர்ஷ்வா தனிப்பண்பையும் பூர்ஷ்வா சுதந்திரத்தையும் பூர்ஷ்வா சுயேச்சையையும் ஒழிப்பதே நமது குறிக்கோள் என்பதில் சந்தேகமில்லை.

இன்றைய பூர்ஷ்வா பொருளுற்பத்திச் சூழ்நிலையில், சுதந்திரம் என்றால் வர்த்தக சுதந்திரம், சுதந்திரமான விற்பனை வாங்கல் என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது.

ஆனால், விற்பனை வாங்கல் மறைந்துவிட்டால், சுதந்திரமான விற்பனை வாங்கலும் மறைந்துவிடுகிறது. சுதந்திரமான விற்பனை வாங்கல் பற்றிய இந்தப் பேச்சுக்கும், பொதுவாகச் சுதந்திரத்தைக்

---

* ஜீவனுள்ள உழைப்பு: தொழிலாளி. சேமிக்கப்பட்டுள்ள உழைப்பு - மூலதனம். (மொ-ர்).

குறித்து நமது பூர்ஷ்வாக்கள் பேசும் இதர துணிகரமான சொற்களுக்கும், ஏதாவது அர்த்தம் இருக்குமானால், அது, மத்திய காலத்தில் கட்டுண்டு கிடந்த வியாபாரிகளுடனும் நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டிருந்த விற்பனை வாங்கலுடனும் மாறுப்படுத்திப் பார்த்தால் மட்டுமே புலப்படும். கம்யூனிஸ்ட் முறையில், விற்பனை வாங்கலையும் பூர்ஷ்வா பொருளுற்பத்தி நிலைமைகளையும் பூர்ஷ்வா வர்க்கத்தையுமே ஒழிக்கும் நிலையோடு ஒப்பு நோக்கினால், அந்தச் சுதந்திரமான விற்பனை வாங்கல் பற்றிய பேச்சுக்கும் பூர்ஷ்வாக்கள் பேசும் இதர 'துணிகரமான சொற்களுக்கும்' எவ்வித அர்த்தமும் கிடையாது.

நாங்கள் தனிஉடைமையை ஒழித்துவிட உத்தேசித்திருக்கிறோமென்பதைக் கண்டு நீங்கள் நடுங்குகிறீர்கள். ஆனால் தற்காலத்திலுள்ள உங்களுடைய சமூகத்தில், ஜனத் தொகையில் பத்தில் ஒன்பது பேரின் தனி உடைமை முன்பே ஒழிக்கப்பட்டு விட்டது. இந்த 100க்கு 90 பேருக்குச் சொத்து இல்லாமல் இருக்கும் ஒரே காரணத்தால்தான், ஒரு சிலருக்குச் சொத்து இருக்கிறது. எனவே, சமுதாயத்தின் மிகப் பெரும்பாலோருக்கு எத்தகைய சொத்துமில்லாத நிலைமையை அவசியமான நிபந்தனையாகக்கொண்ட ஒரு உடைமை முறையை ஒழிக்க நாங்கள் உத்தேசித்திருக்கிறோமென்பதே உங்கள் குற்றச்சாட்டு.

ஒரே வாக்கியத்தில் சொல்வதெனில் உங்கள் உடைமையை ஒழித்துவிட உத்தேசித்திருக்கிறோமென்று எங்களைக் கடிந்து கொள்கிறீர்கள். ரொம்ப சரி. அதுதான் எங்கள் உத்தேசம்.

மூலதனம், பணம் அல்லது வாடகையாக, உழைப்பை மாற்ற முடியாத நிலை ஏற்படும்பொழுது, உழைப்பை ஏகபோகமாக்குவதற்குத் தகுதியான சமூக சக்தியாக மாற்றமுடியாத நிலை ஏற்படும் பொழுது, அதாவது, தனிநபர் உடைமையை பூர்ஷ்வா சொத்தாக மூலதனமாக மாற்றமுடியாத நிலை ஏற்படும்பொழுது, அந்த வினாடியில், தனிப் பண்பு மறைந்து விடுகிறதென்று நீங்கள் சொல்கிறீர்கள்.

ஆகவே, "தனி மனிதன்" என்று கூறும்பொழுது, பூர்ஷ்வாவைத் தவிர, மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த உடையவனைத்

தவிர வேறு ஒருவரையும் நீங்கள் பொருள்கொள்ளவில்லை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். உண்மையில் அத்தகைய நபர் குறுக்கிடமுடியாதபடி துடைத்தெறியவேண்டும்; அத்தகைய நபர் ஏற்படமுடியாமல் செய்யவேண்டும்.

சமுதாயத்தின் உற்பத்திப் பொருட்களைச் சுவிகரித்துக் கொள்ளும் சக்தியை எந்த மனிதனிடமிருந்தும் கம்யூனிஸம் பறிக்கவில்லை. இவ்வாறு உற்பத்திப் பொருட்களைச் சுவிகரித்துக் கொள்வதின்மூலம் மற்றவர் உழைப்பின்மீது ஆதிக்கம் வகிக்கும் சக்தியை மனிதனிடமிருந்து பறிப்பதே கம்யூனிஸம் செய்யும் காரியம்.

தனி உடைமையை ஒழித்துவிட்டால், எல்லா வேலைகளும் நின்றுவிடுமென்றும் சர்வ வியாபியான சோம்பேறித்தனம் நம்மைக் கவிழ்த்து விடுமென்றும் ஆட்சேபணை கூறப்படுகிறது.

இந்தக் கூற்றின்படி, வெகுநாட்களுக்கு முன்பே, சுத்த சோம்பேறித்தனத்தின்மூலம் பூர்ஷ்வா சமூகம் பாழடைந்துபோயிருக்க வேண்டும்; ஏனெனில் அந்தச் சமூகத்தில் உழைக்கும் உறுப்பினர்கள் எந்தச் சொத்தையும் அடைவதில்லை; சொத்தை அடைகிறவர்களோ உழைப்பதில்லை. மூலதனம் இல்லாதுபோய்விட்டால், எத்தகைய கூலி உழைப்பும் இருக்க முடியாதென்ற கருத்தின் மற்றொரு வெளியீடாகவே இந்த ஆட்சேபணை முழுமையும் உள்ளது.

கம்யூனிஸ்ட் முறையில் பௌதீகப் பொருட்களை உற்பத்தி செய்து சுவீகரிப்பதற்கு எதிராக வற்புறுத்தப்படும் சகல ஆட்சேபணைகளும், அதேபோல, கம்யூனிஸ்ட் முறைகளில் அறிவுப் பொருட்களை உற்பத்தி செய்து சுவாதீனப்படுத்திக்கொள்வதற்கு எதிராகவும் வலியுறுத்தப்படுகின்றன. பூர்ஷ்வாவுக்கு, வர்க்க உடைமை மறைந்தால் உற்பத்தியே மறைந்துவிடுமென்று தோன்றுவதைப்போல, வர்க்கப் பண்பாடு மறைந்தால், எல்லாப் பண்பாடும் மறைந்துவிடுவதாகத் தோன்றுகிறது.

எந்தப் பண்பாட்டின் மறைவுக்காக அவர் புலம்புகிறாரோ, அந்தப் பண்பாடு, மிகப் பெருவாரியான மக்களுக்கு, யந்திரத்தைப் போல் இயங்குவதற்கான பயிற்சியாக மட்டுமே உள்ளது.

சுதந்திரம், பண்பாடு, சட்டம் முதலியவற்றைப் பற்றி நீங்கள் கொண்டுள்ள உங்களுடைய பூர்ஷ்வாக் கருத்துக்களை அளவு கோலாகக்கொண்டு, பூர்ஷ்வா உடைமையை ஒழிக்க நாங்கள் உத்தேசித்திருப்பதை மதிப்பிடும்வரை, நீங்கள் எங்களுடன் தர்க்கம் செய்யத் தேவையில்லை. உங்களுடைய கருத்துக்களே பூர்ஷ்வாப் பொருளுற்பத்தி நிலைமைகளிலிருந்து, பூர்ஷ்வா சொத்துரிமை நிலைமைகளிலிருந்து வளர்ந்தவைதான். உங்களுடைய வர்க்கத்தின் பொருளாதார வாழ்க்கை நிலைமைகளால் தீர்மானிக்கப்பட்ட தன்மையையும் போக்கையும் சாராம்சமாகக் கொண்ட உங்கள் இச்சா சக்தியை எல்லோருக்கும் சட்டமாகச் செய்து விடுகிறீர்கள். உங்கள் நீதி சாஸ்திரம் இத்தகையது! அதைப் போலவே, உங்களுடைய இதர கருத்துக்களும் உள்ளன.

உங்களுடைய இன்றைய பொருளுற்பத்தி முறையிலிருந்தும் உடைமை வடிவத்திலிருந்தும் தோன்றியுள்ள சமுதாய அமைப்புகள், பொருளுற்பத்தியின் முன்னேற்றத்தில் தோன்றி மறையும் சரித்திரபூர்வமான உறவுகளாகும். ஆனால் அவற்றை என்றைக்கும் நிரந்தரமான இயற்கை விதிகளாகவும் பகுத்தறிவு விதிகளாகவும் மாற்றும்படி உங்களை ஒரு சுயநலம் நிறைந்த தவருன பார்வை தூண்டுகிறது. உங்களுக்கு முன் இருந்த ஒவ்வொரு ஆளும் வர்க்கமும் கொண்டிருந்த தவருன சுயநலப் பார்வையே இது. பண்டைக்காலச் சொத்துரிமை விஷயத்தில் நீங்கள் தெளிவாகக் காண்பதை, பிரபுத்துவச் சொத்துரிமை விஷயத்தில் நீங்கள் ஒப்புக்கொள்வதை, உங்களுக்குச் சொந்தமான பூர்ஷ்வா சொத்துரிமை விஷயத்தில் ஒப்புக்கொள்ள முடியாதபடி நீங்கள் தடுக்கப்பட்டிருகிறீர்களென்பது உண்மையே!

குடும்ப ஒழிப்பு! கம்யூனிஸ்டுகளுடைய இந்த இழிவான யோசனையைக் கேட்டவுடன் அதி தீவிரவாதிகளும் சீறி எழுகின்றனர்.

இன்றைய குடும்பம், பூர்ஷ்வா குடும்பம், எதை அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது? மூலதனத்தை; தனிநபரின் லாபத்தை. இது தன் பூர்ண வளர்ச்சி அடைந்த வடிவத்தில், பூர்ஷ்வாக்கள் மத்தியில் மட்டுமே இருக்கிறது. ஆனால் இந்த நிலைமைக்கு அனு

பந்தமாக நாம் காண்பதென்ன? தொழிலாளர் மத்தியில், அநேக மாக, குடும்பம் இல்லாமலிருக்கிறது. பொது விபசாரம், அனுபந்த மாக உள்ள நிலைமையின் இன்னொரு அம்சமாகும்.

பூர்ஷ்வா குடும்பத்தின் அனுபந்தம் மறையும்பொழுது, பூர்ஷ்வா குடும்பம் இயல்பாகவே மறைந்துவிடும்; மூலதனம் மறையும்பொழுது இரண்டும் மறைந்துவிடும்.

பெற்றோர்கள் தம் குழந்தைகளைச் சுரண்டுவதை நிறுத்த விரும்புகிறோமென்று எங்கள்மீது குற்றஞ் சாட்டுகிறீர்களா? இதற்கு நாங்கள் குற்றவாளிகள் என்று ஒப்புக்கொள்கிறோம்.

ஆனால் வீட்டுக் கல்விக்குப் பதிலாகச் சமூகக் கல்வியை நாங்கள் நிலைநாட்டும்பொழுது, மிகவும் புனிதமான உறவுகளை நாங்கள் அழிப்பதாக நீங்கள் கூறுவீர்கள்.

உங்களுடைய கல்விமுறை எத்தகையது? அதுவும் சமூகக் கல்வியல்லவா? நீங்கள் எந்தச் சூழ்நிலைகளில் போதிக்கிறீர்களோ அந்தச் சூழ்நிலைகளாலும், சமுதாயம் நேரடியாகவோ மறைமுகமாகவோ தலையிடுவதாலும், பள்ளிக்கூடங்கள் முதலியவற்றாலும் அந்தக் கல்வி தீர்மானிக்கப்படவில்லையா? கல்வியில் சமுதாயம் தலையிடவேண்டுமென்று கம்யூனிஸ்ட்கள் புதிதாக யுக்தி செய்யவில்லை; அந்தத் தலையீட்டின் தன்மையை மாற்றவே, கல்வியை ஆளும் வர்க்கத்தின் செல்வாக்கிலிருந்து மீட்கவே அவர்கள் முயல்கின்றனர்.

குடும்பத்தையும் கல்வியையும் பற்றியும் தந்தைக்கும் குழந்தைக்குமுள்ள புனிதமான உறவுபற்றியும் பூர்ஷ்வாக்கள் ஆடம்பரமாகப் பேசும் வெற்றுரைகள் மேலும் அதிகமாக அருவருப்பை அளிக்கின்றன; ஏனென்றால், நவீனத் தொழில் இயங்குவதால், தொழிலாளர்களிடையிலுள்ள சகல குடும்பப் பிணைப்புகளும் அறுத்தெறியப்படுகின்றன; தொழிலாளர்களின் குழந்தைகள் வெறும் வர்த்தகப் பண்டங்களாகவும் உழைப்புக் கருவிகளாகவும் மாற்றப்படுகின்றனர்.

ஆனால் கம்யூனிஸ்டுகளாகிய நீங்கள் பெண்களைப் பொதுவாக்கி விடுவீர்களென்று பூர்ஷ்வாக்கள் அனைவரும் ஒன்றுபோல் இசைக்கிறார்கள்.

பூர்ஷ்வா தன் மனைவியை ஒரு உற்பத்திக் கருவியாக மட்டுமே பார்க்கிறான். உற்பத்திக் கருவிகள் பொதுவில் பயன்படப் போகின்றனவென்று அவன் கேள்விப்படுகிறான். எனவே, எல்லோருக்கும் பொதுவாகப் பயன்படும் நிலைமை பெண்களுக்கும் ஏற்பட்டு விடுமென்றுதான் அவன் இயல்பாகவே முடிவு செய்ய முடியும்.

வெறும் உற்பத்திக் கருவிகளாகப் பெண்களுக்குள்ள அந்தஸ்தை ஒழிக்க வேண்டுமென்பதே உண்மையான பிரச்னை என்று அவன் மனதில் சந்தேகமாகக் கூட உதயமாவதில்லை.

மற்றபடி, கம்யூனிஸ்ட்கள் பகிரங்கமாகவும் உத்தியோக பூர்வமாகவும் பெண்களைப் பொதுவாக்கப்போகிறார்களென்று பாசாங்கு செய்து, நமது பூர்ஷ்வாக்கள் சன்மார்க்கவாதிகளாகக் கோபிப்பதைக் காட்டிலும் பரிகசிக்கத் தக்கது வேறொன்றும் இருக்க முடியாது. கம்யூனிஸ்ட்கள் பெண்களைப் பொதுவாக்கத் தேவையில்லை; அந்த முறை அனாதிகாலந் தொட்டு இருந்து வந்திருக்கிறது.

நமது பூர்ஷ்வாக்கள் பொதுவிபசாரிகளிடம் செல்வதைக் குறிப்பிடத் தேவையில்லை; அத்துடன் அவர்கள் தமது தொழிலாளரின் மனைவிகள், பெண்கள் ஆகியோருடன் திருப்தியடையாமல்—தமக்குள் ஒருவர் மனைவியை இன்னொருவர் வசப்படுத்திக் கொள்வதில் அதிகப்பட்ச இன்பம் அடைகின்றனர்.

பூர்ஷ்வாத் திருமணம் என்பது உண்மையில், மனைவிகளைப் பொதுவாக்கும் ஒரு முறை; எனவே, கம்யூனிஸ்ட்கள்மீது அதிகப்பட்சமாகக் குற்றஞ்சாட்ட வேண்டுமானால், வஞ்சகமாக மூடி மறைக்கப்பட்டிருக்கும் முறையில் பெண்கள் பொதுவாக்கப் பட்டிருப்பதற்குப் பதிலாகப் பகிரங்கமாகச் சட்ட சம்மதம் பெற்ற முறையில் அதைச் செய்ய விரும்புகிறார்களென்று கூறலாம்! மற்றபடி, இன்றைய உற்பத்தி முறையை ஒழிப்பதன்மூலம், அந்த முறையிலிருந்து தோன்றியிருக்கும் பொது மகளிர் முறையும் ஒழியும் என்பது, அதாவது பகிரங்க விபசாரம், ரகசிய விபசாரம் இரண்டும் ஒழியும் என்பது நிதர்சனமான விஷயமாகும்.

மேலும், தேசங்களையும் தேசிய இனங்களையும் ஒழிக்க விரும்புவதாகக் கம்யூனிஸ்டுகள்மீது குற்றஞ் சாட்டப்படுகிறது.

உழைப்பவர்களுக்கு ஒரு தேசமும் இல்லை. அவர்கள் பெற்றிராத ஒன்றை நாங்கள் அவர்களிடமிருந்து பறித்துவிட முடியாது. தொழிலாளி வர்க்கம் முதன்முதலில் அரசியல் மேலாதிபத்தியத்தைப் பெறவேண்டும்; தேசத்தின் தலைமை வர்க்கமாக உயரவேண்டும்; தன்னையே தேசமாக அமைத்துக்கொள்ள வேண்டும். இந்த அளவுக்கு அது தேசியத் தன்மை கொண்டிருக்கிறது; ஆனால் தேசியத் தன்மை என்ற சொல்லுக்கு பூர்ஷ்வாக்கள் கொடுக்கும் பொருளில் அல்ல.

பூர்ஷ்வா வர்க்க வளர்ச்சியாலும் வர்த்தக சுதந்திரத்தாலும் உலகச் சந்தையாலும் உற்பத்தி முறையும் அதற்கேற்ற வாழ்க்கை முறைகளும் ஒரு சீராக இருப்பதாலும், ஜனசமூகங்களுக்கு இடையேயுள்ள தேசீய வேறுபாடுகளும் விரோதங்களும் தினந்தோறும் மேன்மேலும் மறைந்து கொண்டிருக்கின்றன.

தொழிலாளி வர்க்க ஆதிக்கம் ஏற்பட்டால், மேலும் துரிதமாக அவை மறையும்படி அது செய்யும். ஒன்றுபட்ட நடவடிக்கை எடுப்பது, குறைந்தபட்சமாக முக்கியமான நாகரீக நாடுகளாவது ஒன்றுபட்டு நடவடிக்கை எடுப்பது, தொழிலாளி வர்க்க விமோசனத்துக்கு அவசியமான நிபந்தனைகளில் ஒன்றாகும்.

ஒருவர் இன்னொருவரைச் சுரண்டுவதற்கு எந்த அளவுக்கு முடிவுகட்டப் படுகிறதோ, அந்த அளவுக்கு ஒருதேசம் இன்னொரு தேசத்தைச் சுரண்டுவதற்கும் முடிவுகட்டப்படும். ஒரு தேசத்துக்குள்ளிருக்கும் வர்க்கங்களுக்கிடையேயுள்ள பகை எந்த அளவுக்கு மறைகிறதோ, அந்த அளவுக்கு ஒரு தேசத்துக்கும் இன்னொரு தேசத்துக்கும் உள்ள பகைக்கு முடிவு ஏற்படும்.

மதச் சார்பிலிருந்தும் தத்துவஞான நிலையிலிருந்தும், பொதுவாகச் சித்தாந்த நிலையிலிருந்தும் கம்யூனிஸத்துக்கு எதிராகக் கூறப்படும் குற்றச்சாட்டுகள், அக்கரையுடன் பரிசீலிப்பதற்குத் தகுதியற்றவை.

மனிதனுடைய பௌதீக வாழ்வின் சூழ்நிலைகளிலும் சமூக உறவுகளிலும் சமூக வாழ்விலும் ஏற்படும் ஒவ்வொரு மாறுதலோடும் மனிதனின் கருத்துக்களும் அபிப்பிராயங்களும் கண்ணோட்டங்

களும், சுருங்கக் கூறினால் மனிதனின் உணர்வும் மாறுகிறது என் பதைப் புரிந்துகொள்வதற்கு ஆழ்ந்த உள்ளுணர்வு தேவையா ?

பௌதீகப் பொருளுற்பத்தி எந்த அளவுக்கு மாறுகிறதோ அதே அளவுக்கு அறிவுப்பொருளுற்பத்தியும் தன்மையில் மாறுதல் அடைகிறது என்பதைத் தவிர, கருத்துக்களின் சரித்திரம் வேறு எதை நிரூபிக்கிறது ? ஒவ்வொரு சகாப்தத்திலும் ஆட்சி புரிந்த கருத்துக்கள், அந்தந்த சகாப்த ஆளும் வர்க்கத்தின் கருத்துக்களாகவே இருந்துவந்திருக்கின்றன.

சமூகத்தைப் புரட்சிகரமான முறையில் மாற்றியமைக்கக் கூடிய கருத்துக்களைப்பற்றி மனிதர்கள் பேசும்பொழுது அவர்கள் எதை வெளிப்படுத்துகின்றனர் ? பழைய சமூகத்திற்குள்ளே, ஒரு புதிய சமூகத்தின் அம்சங்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனவென் பதையும், பழைய வாழ்க்கை நிலைமைகள் கரைந்தொழியும் வேகத்துக்கு ஏற்றபடி பழைய கருத்துகளும் கரைந்தொழிந்து வருகின்றனவென்பதையும்தான் அவர்கள் குறிப்பிடுகின்றனர்.

பண்டைக்கால உலகம் மரணவேதனையிலிருந்தபொழுது, பண்டைக்கால மதங்கள்மீது கிறிஸ்தவ மதம் வெற்றிகண்டது. பதினெட்டாம் நூற்றாண்டில், கிறிஸ்தவ மதக் கருத்துக்கள் பகுத்தறிவுக் கருத்துக்களுக்குமுன் பணிந்து கீழடங்கியபொழுது, அப்பொழுது, புரட்சித்தன்மை பெற்றிருந்த பூர்ஷ்வாவர்க்கத்துடன் பிரபுத்துவ சமூகம் தன் மரணப் போராட்டத்தை நடத்தியது. மத சுதந்திரம், மனச்சாட்சி சுதந்திரம் ஆகிய கருத்துக்கள், அறிவுத்துறையில் ஆதிக்கம்செலுத்திய சுதந்திரப் போட்டியைத்தான் பிரதிபலித்தன.

> "மதம், தார்மீக நெறி, தத்துவஞானம், சட்ட சாஸ்திரம் ஆகியவற்றைப்பற்றிய கருத்துக்கள், சரித்திரத்தின் வளர்ச்சிப் போக்கில் திருத்தமடைந்திருப்பதில் சந்தேகமில்லை. ஆனால் மதம், தார்மீகம், தத்துவஞானம், அரசியல் விஞ்ஞானம், சட்டம் ஆகியவை அனைத்தும் இந்த மாறுதலைச் சமாளித்து, எப்பொழுதுமே நீடித்து வந்தன"

என்று கூறுவார்கள்.

"மேலும், சுதந்திரம், நியாயம் என்பனபோன்ற நிரந்தர உண்மைகள் இருக்கின்றன ; அவை சமுதாயத்தின் சகல நிலைகளுக்கும் பொதுவானவை. ஆனால் கம்யூனிஸம் நிரந்தர உண்மைகளை ஒழித்துவிடுகிறது ; மதம், தார்மீக நெறி ஆகிய அனைத்தையும் புதிய அடிப்படையில் நிறுவுவதற்குப் பதிலாக, ஒழித்தே விடுகிறது. எனவே, கடந்தகாலத்தின் சரித்திரபூர்வமான அனுபவம் முழுமைக்கும் முரணான வகையில் அது செயல்படுகிறது."

இந்தக் குற்றச்சாட்டை அலசிப்பார்த்தால் என்னதான் மிஞ்சுகிறது? வெவ்வேறு சகாப்தங்களில் வெவ்வேறு வடிவங்களை மேற்கொண்ட வர்க்க விரோதங்களின் வளர்ச்சியில்தான் கடந்தகாலச் சமூகம் முழுமையின் வரலாறு அடங்கியிருக்கிறது.

ஆனால் அந்த வர்க்கவிரோதங்கள் எந்த வடிவத்தை மேற்கொண்டிருந்தாலும், சமூகத்தின் ஒரு பகுதியை இன்னொரு பகுதி சுரண்டுவது என்ற உண்மை கடந்தகால சகாப்தங்களின் அனைத்துக்கும் பொதுவாயிருந்தது. எனவே, கடந்த காலகட்டங்களின் சமுதாய உணர்வு, பற்பலவாகவும் பலவிதமாகவும் காட்சியளித்தபோதிலும், சில குறிப்பிட்ட பொது உருவங்கள் அல்லது பொதுப்படையான கருத்துக்களுக்குள் இயங்கிவந்திருக்கிறது ; வர்க்க முரண்பாடுகள் பூர்ணமாக மறைந்தாலல்லாது, பூர்த்தியாக மறையமுடியாத பொது உருவங்கள் அல்லது பொதுப்படையான கருத்துக்களுக்குள் இயங்கிவந்திருக்கிறது. இதில் ஆச்சரியமில்லை.

கர்ணபரம்பரையாக வந்துள்ள உடைமை உறவுகளிடமிருந்து மிகத் தீவிரமாக முறித்துக்கொள்வதே கம்யூனிஸ்ட் புரட்சி. அதன் வளர்ச்சியில், பரம்பரைக் கருத்துக்களிடமிருந்து மிகத் தீவிரமாக முறித்துக்கொள்வதும் அடங்கியிருப்பதில் ஆச்சரியமில்லை.

ஆனால், கம்யூனிஸத்துக்கு பூர்ஷ்வாக்கள் கூறும் ஆட்சேபணைகளை இத்துடன் முடித்துக்கொள்வோம்.

தொழிலாளி வர்க்கத்தை ஆளும் வர்க்கத்தின் நிலைக்கு உயர்த்துவது, ஜனநாயகத்துக்காக நிகழும் போராட்டத்தில்

வெற்றி காண்பது, தொழிலாளி வர்க்கத்தின் புரட்சியில் முதல்படியாக விருக்கிறதென்பதை நாம் மேலே பார்த்தோம்.

தொழிலாளி வர்க்கம் தன் அரசியல் ஆதிபத்தியத்தை எதற்குப் பயன்படுத்தும்? பூர்ஷுவா வர்க்கத்திடமிருந்து படிப்படியாக மூலதனத்தைப் பிடுங்கிக்கொள்வதற்காக; அரசாங்கத்தின் கரங்களில், அதாவது ஆளும் வர்க்கமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ள தொழிலாளிவர்க்கத்தின் கையில் சகல உற்பத்திக் கருவிகளையும் ஒருமைப்படுத்துவதற்காக; உற்பத்திசக்திகளின் தொகையை எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாகப் பெருக்குவதற்காக.

உடைமை உறவுகளையும் பூர்ஷுவா உற்பத்தி நிலைமைகளையும் சர்வாதிகாரரீதியில் ஆக்கிரமிக்காமல், இதை ஆரம்பத்தில் சாதிக்கமுடியாதென்பது வெளிப்படை. எனவே இந்த ஆக்கிரமிப்புக்களுக்கான நடவடிக்கைகள், பொருளாதாரரீதியில் போதாதவையாகவும் நிலையற்றதாகவும் புலப்படும். ஆனால் இயக்கத்தின் போக்கில் அவை தம்மையே மீறிவிடும்; பழைய சமூக அமைப்பை மேலும் ஆக்கிரமிப்பதை அவசியமாக்கும்; பொருளுற்பத்திமுறையின் பூர்ணமான புரட்சிகரமான மாறுதலைச் சாதிக்கவேண்டுமானால் இவற்றைத் தவிர்க்கமுடியாது.

இந்த நடவடிக்கைகள் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறாகத்தான் இருக்கும்.

எனினும், மிகவும் வளர்ச்சியடைந்துள்ள நாடுகளுக்குக் கீழ்க்கண்டவை பொதுவாகப் பொருந்தக் கூடியவை.

1. நிலத்திலுள்ள சொத்துரிமையை ஒழிப்பது; நிலவாடகைகள் அனைத்தையும் பொதுக்காரியங்களுக்குப் பயன்படுத்துவது.

2. வருமானம் உயர உயர வரிவிகிதமும் செங்குத்தான படிகளில் உயரக்கூடிய வகையில் வருமானவரி விதிப்பது.

3. பிதிரார்ஜித உரிமை அனைத்தையும் ஒழித்துவிடுவது.

4. நாட்டைவிட்டு ஓடியவர்கள், நாட்டுக்கு எதிரான கலகக்காரர்கள் ஆகியோரின் உடைமையைப் பறிமுதல் செய்வது.

5. அரசாங்க மூலதனத்தைக் கொண்டு தேசீய பாங்கி நடத்துவதன்மூலம், அந்த பாங்கிக்கே ஏகபோக அதிகாரம் அளிப்பதன்மூலம், கடன் கொடுக்கும் வசதியை அரசாங்கத்தின் கரங்களில் ஒருமையப்படுத்துவது.

6. போக்குவரத்துச் சாதனங்களையும் தந்தி தபால்போன்ற செய்திச் சாதனங்களையும் அரசாங்கத்தின் கரங்களில் ஒருமையப்படுத்துவது.

7. அரசாங்கத்துக்குச் சொந்தமான பாக்டரிகள், உற்பத்திக் கருவிகள் ஆகியவற்றை விரிவுபடுத்துவது ; பண்படுத்தப்படாத நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டுவருவது ; ஒரு பொதுவான திட்டத்தின்படி நிலத்தின் தரத்தை உயர்த்துவது.

8. வேலை செய்வதற்கு அனைவரும் ஒரே அளவில் கடமைப்பட்டவராதல் ; யந்திரத்தொழில் பட்டாளங்களை, குறிப்பாக விவசாயத்துக்காக ஏற்படுத்துவது.

9. யந்திரத் தொழில்களை விவசாயத்துடன் இணைப்பது; ஜனத்தொகையை ஏற்றத்தாழ்வின்றி ஒரு சீராகப் பரவி வாழும்படிசெய்து, நகரத்துக்கும் கிராமத்துக்குமுள்ள பேதாபேதத்தைப் படிப்படியாக அகற்றுதல்.

10. பொதுப்பள்ளிக்கூடங்களில் எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசமாகக் கல்வி போதித்தல், குழந்தைகளை பாக்டரியில் வேலைவாங்கும் இன்றைய முறையை ஒழித்தல். யந்திரப் பொருளுற்பத்தியுடன் கல்வியை இணைத்தல். மற்றும் இதைப் போன்ற பல.

வளர்ச்சிப் போக்கில், வர்க்கபேதங்கள் மறையும்பொழுது, தேசம் முழுவதின் விஸ்தாரமான சங்கத்தில் பொருளுற்பத்தி முழுவதும் குவிக்கப்பட்டவுடன், பொது அதிகாரம் அதன் அரசியல் தன்மையை இழந்துவிடும். அரசியல் அதிகாரம் என்பதின் சரியான பொருள் என்ன ? ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்தை ஒடுக்குவதற்காக நிறுவும் அதிகாரம் மட்டுமே. பூர்ஷ்வாவர்க்கத்துடன் நடத்தும் போராட்டத்தில், தொழிலாளிவர்க்கம் சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தத்தால், தன்னைத்தானே ஒரு வர்க்கமாக

திரட்டிக்கொள்ளும்படி நேரிட்டால், ஒரு புரட்சியின்மூலம் அது தன்னை ஆளும் வர்க்கமாக ஆக்கிக்கொண்டால், அதன்மூலம் அது பழைய பொருளுற்பத்தி நிலைமைகளைப் பலாத்காரமாகத் துடைத்தெறிந்தால், அப்பொழுது அது அந்த நிலைமைகளுடன் பொதுவாக வர்க்கங்களும் வர்க்கபேதங்களும் இருப்பதற்கான நிலைமைகளையும் ஒழித்துவிடும்; அதன்மூலம் ஒரு வர்க்கம் என்ற வகையில் தனக்குள்ள மேலாதிக்கத்தையும் ஒழித்துவிடும். வர்க்கங்களையும் வர்க்க விரோதங்களையும் கொண்ட பழைய பூர்ஷ்வா சமூகத்துக்குப் பதிலாக, ஒவ்வொருவருடைய சுதந்திர மான வளர்ச்சியும் எல்லோருடைய சுதந்திர வளர்ச்சிக்கு அவசியமாயுள்ள ஒரு சங்கத்தை நாம் பெறுவோம்.

# 3. சோஷலிஸ்ட் இலக்கியமும், கம்யூனிஸ்ட் இலக்கியமும்

## 1. பிற்போக்கான சோஷலிஸம்

### (அ) பிரபுத்துவ சோஷலிஸம்

பிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளின் பிரபுக்களுக்கு ஏற்பட்ட சரித்திர நிலைமையின் காரணமாக, நவீன பூர்ஷ்வா சமூகத்தை எதிர்த்துப் பிரசுரங்களை எழுதுவது அவர்களுடைய தொழிலாயிற்று. 1830-ஜூலையில் நடந்த பிரஞ்சுப் புரட்சியிலும், இங்கிலாந்து சீர்திருத்தக் கிளர்ச்சியிலும், இந்தப் பிரபுக்கள், வெறுக்கத்தக்க *அற்பனிடம் மீண்டும் தோல்வியுற்றனர். அதன் பிறகு, குறிப்பிடத்தக்க அரசியல் போராட்டத்துக்குக் கொஞ்சமும் இடமில்லாமல் போய்விட்டது. இலக்கியப் போராட்டம் மட்டுமே சாத்தியமானதாயிருந்தது. ஆனால் இலக்கியத் துறையில்கூட, †மீட்சிக் காலத்தின் பழைய கூச்சல்கள் அசாத்தியமாகி விட்டன.

அனுதாபத்தைப் பெறுவதற்காக, பிரபுக்கள், மேற்பார்வைக் காவது, தமது சொந்த நலன்களை மறக்கவேண்டியிருந்தது; சுரண்டப்படும் தொழிலாளி வர்க்க நலனுக்காக மட்டும், பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராக, தமது குற்றச்சாட்டுப் பத்திரத்தைத் தயாரிக்க வேண்டியிருந்தது. இவ்வாறாக, தங்களுடைய புதிய எஜமானன்மீது வசை கவி பாடியும், வரவிருக்கும் இறுதி விபத்தைக் குறித்துக் கொடிய தீர்க்க திருஷ்டி வசனங்களை அவர்கள் காதில் ஓதியும், பிரபுக்கள் வஞ்சம் தீர்த்துக்கொண்டார்கள்.

இவ்வாறு தோன்றியது பிரபுத்துவ சோஷலிஸம்; ஒரு பாதி புலம்பல்; மறுபாதி வசை கவி; ஒரு பாதி இறந்த காலத்தின் எதி

---

* பூர்ஷ்வாக்களைக் குறிக்கிறது. அவர்களைப் பிரபுக்கள் அற்பராகக் கருதினர்கள். (மொ-ர்.)

† 1660க்கும் 1680க்கும் இடையே இங்கிலாந்தில் மீட்சி சம்பவித்ததையல்ல; 1814-க்கும் 30க்குமிடையே பிரான்ஸில் சம்பவித்த மீட்சியே இங்கு குறிப்பிடப்படுகிறது.—எங்கல்ஸ் 1888 பதிப்புக்கு எழுதிய குறிப்பு, யதேச்சாதிகார முடியாட்சியின் மீட்சியே இங்குக் குறிப்பிடப்படுகிறது. (மொ-ர்.)

ரொலி; இன்ஞெரு பாதி எதிர்காலத்தின் அபாய அறிவிப்பு; சில சமயங்களில் அது தன் கூர்மையான, கிண்டலான விமர்சனச் சுடுசொற்கள் மூலம் பூர்ஷ்வா வர்க்கத்தின் இருதய மையத்தைத் தாக்கியது; ஆனல் எப்பொழுதுமே, நவீன சரித்திரத்தின் முன்னேற்றத்தைக் கொஞ்சமும் புரிந்துகொள்ள முடியாத காரணத்தால், பரிகசிக்கத் தக்க பலனேயே தோற்றுவித்தது.

மக்களைத் தங்கள் பக்கம் திரட்டும் பொருட்டு, பிரபுக்கள், தொழிலாளரின் பிச்சைப் பையைக் கொடியாகக் காட்டினர்கள். ஆனல் அவர்களோடு மக்கள் சேர்ந்தபொழுதெல்லாம், அவர்களுடைய பின்வீட்டில் பழைய பிரபுத்துவ பட்டயங்களும் விருதுகளும் இருப்பதைக் கண்டனர்; உரக்கச் சிரித்துக் கேலி செய்துகொண்டே அந்தப் பிரபுக்களைக் கைவிட்டு நழுவினர்.

பிரெஞ்சு 'லெஜிடிமிஸ்டுகள்' என்பாரின் ஒரு சாராரும் 'யங் இங்கிலாந்து' என்பாரின் ஒரு சாராரும்* இந்தக் காட்சியை அளித்தனர்.

பூர்ஷ்வாக்களின் சுரண்டல் முறை, தங்களுடைய சுரண்டல் முறையிலிருந்து வேறுபட்டிருப்ப தாகக் கூறும்பொழுது பிரபுக்கள் ஒரு உண்மையை மறந்துவிடுகிருர்கள்; முற்றிலும் வேறுவகைப்பட்ட சூழ்நிலைகளிலும் சந்தர்ப்பங்களிலும் அவர்கள் சுரண்டியதையும் அந்த முறை இப்பொழுது காலாவதியாகிவிட்டதையும் அவர்கள் மறந்துவிடுகிருர்கள். தமது ஆட்சியில் நவீனத் தொழிலாளிவர்க்கம் ஒருபொழுதும் இருந்ததில்லை என்று அவர்கள் எடுத்துக்கூறும்பொழுது, அவர்களுடைய சமுதாய ஏற்பாட்டிலிருந்தே நவீன பூர்ஷ்வா வர்க்கம் தவிர்க்க முடியாதபடி தோன்றியதென்பதை அவர்கள் மறந்துவிடுகிருர்கள்.

மற்றபடி, தமது கண்டன விமர்சனத்தின் பிற்போக்குத் தன்

* **லெஜிடிமிஸ்டுகள்:** பிரான்ஸின் பிரபுத்துவ சீமான்களின் அரசியல் கட்சி; பூர்பான் முடிமன்னனின் வம்சம் மீண்டும் அரியாசனத்தில் அமர வேண்டுமென்று பாடுபட்ட கட்சி. யங் இங்கிலாந்து: (வாலிப இங்கிலாந்து என்று பொருள்) இவர்கள் பிரிட்டிஷ் கன்சர்வேடிவ்களில் ஒரு பகுதி; சீமான்கள், அரசியல் வாதிகள், இலக்கிய கர்த்தாக்கள் ஆகியோரடங்கிய இந்தக் கோஷ்டி 1842 வாக்கில் அமைக்கப்பட்டது. இதில் பிரசித்திப் பெற்றவர்கள். டிஸ்ரேலி, தாமஸ் கார்லைல் முதலியோர். (—ப-ர்)

மையை அவர்கள் மறைப்பதில்லை. பழைய சமுதாய ஏற்பாட்டைக் கிளைகளோடும் வேரோடும் வெட்டி வீழ்த்தும் பணியைச் சாதிப்பதற்கான வர்க்கம், பூர்ஷ்வா ஆட்சியில் வளர்கிறதென்பதே, பூர்ஷ்வா வர்க்கத்தின்மீதும் அவர்கள் சுமத்தும் முதன்மையான குற்றச்சாட்டு.

தொழிலாளி வர்க்கத்தைப் படைத்ததற்காகவல்ல, ஒரு புரட்சிகரமான தொழிலாளி வர்க்கத்தைப் படைத்ததற்காகவே. அவர்கள் பூர்ஷ்வா வர்க்கததைக் கண்டிக்கிருர்கள்.

எனவே, அரசியல் நடைமுறையில் தொழிலாளிவர்க்கததுக்கு விரோதமான எல்லாவிதமான பலாத்கார நடவடிக்கைகளிலும் அவர்கள் சேர்கின்றனர். அவர்களுடைய முறுக்கான வாய் வேதாந்தப் பேச்சு ஒருபுறமிருக்க, சாமான்யவாழ்வில், தொழிலியல் மரத்திலிருந்து கீழேவிழும் பொற்கனிகளைக் பொறுக்கிக் கொள்வதற்கும், கம்பளி, 'பீட்ரூட்' சர்க்கரை, உருளைக் கிழங்கு மதுவகையருக்கள் முதலியவற்றில் வியாபாரம் செய்வதற்காக, உண்மை, அன்பு, கௌரவம் ஆகியவற்றை விற்பதற்கும் அவர்கள் தயாராக இருப்பார்கள்.*

மதகுரு எப்பொழுதுமே நிலப்பிரபுவுடன் கைகோர்த்து வந்திருப்பதைப் போலவே, புரோகித சோஷலிஸமும் பிரபுத்துவ சோஷலிஸமும் சேர்ந்துநிற்கின்றன.

கிறிஸ்துவத் துறவறத்துக்கு சோஷலிஸ்ட் சாயம் பூசுவதை விடச் சுலபமான காரியம் ஒன்றுமில்லை. கிறிஸ்துவ மதம் தனி

* இது குறிப்பாக ஜெர்மனிக்குப் பொருந்தும். அங்கு பிரபுக்களும் அவர்களுக்கு அடுத்த தட்டிலிருந்த கனவான்களும் தமது 'எஸ்டேட்டு'களில் பெரும்பகுதியைக் காரியஸ்தர்களைக்கொண்டு சாகுபடி செய்தனர்; மேலும் அவர்கள் பீட்ரூட் என்ற ஒருவகைக் கிழங்கிலிருந்து சர்க்கரை உற்பத்திசெய்யும் தொழிலையும் உருளைக் கிழங்கிலிருந்து மதுவகையருக்களை எடுக்கும் தொழிலையும் பெரிய அளவில் செய்தனர். அதிகச் செல்வம் படைத்த பிரபுக்கள் இன்னும் அந்த அளவுக்கு இறங்கவில்லை. ஆனல், மேல்வாரத் தொகை குறையும்பொழுது அதை ஈடுகட்டுவதற்காக, ஏறக்குறைய சந்தேகாஸ்பதமான கூட்டுப் பங்குக் கம்பெனிகளைத் தொடங்குவதற்குத் தமது பெயர்களின் அந்தஸ்தைக் கொடுத்து உதவுவது எப்படி என்பது அவர்களுக்குத் தெரியும். (1888-ம் ஆண்டு ஆங்கிலப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு)

உடைமைக்கும் திருமணத்துக்கும் அரசாங்கத்துக்கும் எதிராக ஆரவாரம் செய்துவரவில்லையா? அவற்றுக்குப் பதிலாக அது தர்மத்தையும் தரித்திரத்தையும், பிரம்மசரியத்தையும், சரீர ஒடுக்கத்தையும் மடத்து வாழ்க்கையையும் மாதா கோவிலையும் பற்றிப் பிரசாரம் செய்துவரவில்லையா? பிரபுவின் வயிற்றெரிச்சலைப் புனிதப்படுத்தும் புனித நீரே கிறிஸ்துவ சோஷலிஸம்.

## (ஆ) குட்டிபூர்ஷ்வா சோஷலிஸம்

பூர்ஷ்வா சமூகத்தால் நாசமடைந்தது நிலப்பிரபுத்துவ வர்க்கம் மட்டுமல்ல; நவீன பூர்ஷ்வா சூழ்நிலையில் வாடி நசித்தது பிரபுத்துவ வர்க்கத்தின் வாழ்க்கை நிலைமை மட்டுமல்ல. மத்திய காலத்து நகரத்தார்களும் சிறுநிலக்காரர்களாகவிருந்த விவசாயிகளும், நவீன பூர்ஷ்வா வர்க்கத்தின் முன்னறிவிப்புகளாக விருந்தனர். தொழில் துறையிலும் வர்க்கத் துறையிலும் குறைவாக வளர்ச்சி அடைந்த நாடுகளில் இன்றும் அந்த இரு வர்க்கங்களும் உதயமாகிக்கொண்டிருக்கும் பூர்ஷ்வாவர்க்கத்தின் பக்கத்தில் உயிரும் உருவமுமாக காலந்தள்ளுகின்றன.

நவீன நாகரீகம் பூர்ண வளர்ச்சி அடைந்துள்ள தேசங்களில், ஒரு புதிய குட்டி பூர்ஷ்வா வர்க்கம் உருப்பெற்றிருக்கிறது. அது தொழிலாளி வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்குமிடையே ஊசலாடிக்கொண்டிருக்கிறது; பூர்ஷ்வா சமூகத்தின் அனுபந்தப் பகுதியாக அது எப்பொழுதுமே தன்னைப் புதுப்பித்துக்கொண்டிருக்கிறது. ஆனால் போட்டி நடவடிக்கையின் பலனாக, இந்த வர்க்கத்தின் தனிப்பட்ட உறுப்பினர்கள் இடைவிடாமல் தொழிலாளி வர்க்கத்துள் தள்ளப்படுகின்றனர். நவீனத தொழில் வளரும்பொழுது, நவீன சமூகத்தின் ஒரு சுயேச்சையான பகுதியாக இருக்க முடியாமல் பூர்ணமாக மறைந்துவிடும் காலம் நெருங்கிவிட்டதை அவர்கள் பார்க்கவும் செய்கிறார்கள். தொழில்களிலும் விவசாயத்திலும் வர்த்தகத்திலும் அவர்களுக்குப் பதிலாக மேற்பார்வையாளர்களும் கட்டளைக்காரர்களும் கடைக் காரியஸ்தர்களும் ஏற்பட்டுவிடுவார்கள் என்பதையும் பார்க்கின்றனர்.

ஜனத் தொகையில் பாதிக்குமேல் விவசாயிகளாகவுள்ள பிரான்ஸ் போன்ற நாடுகளில், பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராக

தொழிலாளி வர்க்கத்தை ஆதரித்த எழுத்தாளர்கள், பூர்ஷ்வா ஆட்சி முறைக்கு எதிராக, விவசாயிகள் குட்டி பூர்ஷ்வாக்கள் ஆகியோரின் நிலையிலிருந்து விமர்சனம் செய்வதும், இந்த இடைத் தட்டு வர்க்கங்களின் கண்ணோட்டத்திலிருந்து தொழிலாளி வர்க்கத்துக்காகப் பரிந்து பேசுவதும் இயல்பாயிருந்தது. இவ்வாருகத் தோன்றியது குட்டி பூர்ஷ்வா சோஷலிஸம். பிரான்ஸில் மட்டுமல்ல, இங்கிலாந்திலும்கூட, இந்த வகையினருக்கு ஸிஸ்மாண்டி தலைவராயிருந்தார்.

இந்த வகை சோஷலிஸம், நவீனகாலப் பொருளுற்பத்தி நிலைமைகளின் முரண்பாடுகளை நுண்ணியமாகக் கூறுபடுத்திக் காட்டியது. பொருளாதார நிபுணர்களின் கபடம் நிறைந்த சமாதானங்களையும் நியாய வாதங்களையும் அது அம்பலப்படுத்தியது. யந்திரங்களாலும் வேலைப் பிரிவினையாலும் ஏற்படும் நாசகார விளைவுகளையும், மூலதனமும் நிலமும் ஒரு சிலர் கையில் குவிந்து வருவதையும், அமித உற்பத்தியும் நெருக்கடிகளும் நிகழ்வதையும் இந்தவகை சோஷலிஸம் மறுக்க முடியாதவகையில் மெய்ப்பித்தது. குட்டி பூர்ஷ்வாக்களுக்கும் விவசாயிகளுக்கும் ஏற்படும் தவிர்க்கமுடியாத அழிவையும் தொழிலாளி வர்க்கத்தின் துன்பத்தையும் பொருளுற்பத்தியின் அராஜகத்தையும், செல்வ வினியோகத்திலுள்ள செங்குத்தான ஏற்றத் தாழ்வையும், தேசங்களிடையே நடைபெறும் தொழில்நாசப் போரையும், பழைய ஒழுக்க நெறியினல் ஏற்பட்ட பந்தங்களும் பழைய குடும்ப உறவுகளும் பழைய தேசீய இனங்களும் கட்டுக்குலைந்து கரைவதையும் இந்த வகை சோஷலிஸம் சுட்டிக்காட்டியது.

எனினும், தான் சாதிக்க விரும்பிய நோக்கங்களைப் பொறுத்த வரை, இந்தவகை சோஷலிஸம், பழைய பொருளுற்பத்தி பரிவர்த்தனை சாதனங்களையும் அவற்றுடன்கூட பழைய உடைமை உறவுகளையும் பழைய சமுதாயத்தையும் மீண்டும் நிலைநாட்ட விரும்புகிறது; அல்லது நவீனப் பொருளுற்பத்தி பரிவர்த்தனை சாதனங்களை, அவற்ருல் தகர்த்தெறியப்படவேண்டிய, அவற்ருல் தகர்த்தெறியப்பட்ட பழைய பொருளுற்பத்தி உறவுகளின் கூண்டுக்குள் அடைத்துவைக்க விரும்புகிறது. இந்த இரண்டு நோக்

கங்களில் எதுவாயிருந்தாலும், இரண்டுமே பிற்போக்கானவை; கற்பனவாத இயல்பைக் கொண்டவை.

பெருந் தொழிலுற்பத்திக்குப் பதிலாக, ஒன்ருேடொன்று இணைந்த கில்டுகளை நிறுவுவதும், விவசாயத்தில் தந்தை வழி உறவுகளை அமைப்பதுமே இந்த வகை சோஷலிஸத்தின் இறுதியான கோஷங்கள்.

கடைசியில், தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வதால் ஏற்படும் மயக்க வெறியின் விளைவுகள் அனைத்தையும், நிலையான சரித்திர உண்மைகள் சிதறடித்தபின், இந்தவகை சோஷலிஸம், மிகக் கேவலமான மனமுடைந்த வேதனையில் முடிவுற்றது.

## (இ) ஜெர்மானிய சோஷலிஸம் அல்லது "நிஜ" சோஷலிஸம்

பிரான்ஸ் நாட்டின் சோஷலிஸ்ட் கம்யூனிஸ்ட் இலக்கியம், அதிகாரத்தில் இருந்த பூர்ஷ்வா வர்க்கத்தின் நிர்ப்பந்தத்தால் தோன்றியது; இந்த அதிகாரத்தை எதிர்த்து நடந்த போராட்டத்தின் வெளியீடாக விளங்கியது. இந்த இலக்கியம், ஜெர்மனியில் பூர்ஷ்வா வர்க்கம் பிரபுத்துவ யதேச்சாதிகாரத்தை எதிர்த்துப் போராடத் தொடங்கியிருந்த சந்தர்ப்பத்தில், ஜெர்மனிக்குள் புகுத்தப்பட்டது.

ஜர்மனியின் தத்துவ ஞானிகளும் தத்துவ ஞானிகளாக வேஷம் போட்டவர்களும் சுதந்திரச் சிந்தனையாளர்களாக ஆடம்பரம்செய்த சொகுசுக்காரர்களும் இந்த இலக்கியத்தை உற்சாகமாக வசப்படுத்திக்கொண்டார்கள். ஆனல் இந்த நூல்கள் பிரான்ஸிலிருந்து ஜெர்மனிக்கு வந்தபொழுது, அவற்றுடன் பிரெஞ்சு சமூக நிலைமைகளும் ஜெர்மனியில் குடியேறவில்லை என்பதைமட்டும் அவர்கள் மறந்துவிட்டனர். ஜெர்மானிய சமுதாய நிலைமைகளில் தொடர்புகொள்ளும்பொழுது, இந்த பிரெஞ்சு இலக்கியம், தன் உடனடி நடைமுறை முக்கியத்துவம் முழுவதையும் இழந்துவிட்டது; வெறும் இலக்கியத்தன்மை மட்டுமே மேற்கொண்டிருந்தது. எனவே, பதினெட்டாம் நூற்ருண்டின் ஜெர்மானிய தத்துவஞானிகளின் பார்வைக்கு, முதலாவது பிரெஞ்சுப் புரட்சியின் கோரிக்கைகள், பொதுப்படையான "அனுபவப் பகுத்

தறிவின்' கோரிக்கைகளாக மட்டுமே தோன்றின. புரட்சித் தன்மை பெற்றிருந்த பிரெஞ்சு பூர்ஷ்வா வர்க்கத்தின் சங்கற்ப வெளியீடு, பரிசுத்த சங்கற்பத்தின் விதிகளாகவே, சங்கற்பம் எத்தகைய விதிகளைக் கொண்டிருக்க வேண்டுமோ அத்தகைய விதிகளாகவே, உண்மையான மனித சங்கற்பத்தின் விதிகளாகவே அவர்களுக்குத் தோன்றியது.

புதிய பிரெஞ்சுக் கருத்துக்களைத் தமது புராதன தத்துவ மனச்சாட்சிக்கு இசைந்ததாக உருவாக்குவதில்தான், தமது தத்துவார்த்தக் கண்ணோட்டத்தைக் கைவிடாதவாறு பிரெஞ்சுக் கருத்துக்களைத் தம்முடையதாக்கிக்கொள்வதில்தான், ஜெர்மானிய இலக்கிய கர்த்தாக்களின் பணி அடங்கியிருந்தது.

இவ்வாறு தம்முடையதாக்கும் சேர்க்கை எம்முறையில் நடைபெற்றதெனில், ஒரு அன்னிய மொழியைச் சுவீகரித்துக்கொள்ளும்முறையில், அதாவது மொழிபெயர்ப்புமுறையில் நடைபெற்றது. பண்டைக்காலப் புறச்சமயத்தாரின் மஹா காவியங்களின் கைப்பிரதிகள்மீது கத்தோலிக்க முனிவர்களைப்பற்றிய முட்டாள் தனமான கதைகளை கத்தோலிக்கத் துறவிகள் எழுதிவைத்ததைப்பற்றி நன்கறிவோம். பிரெஞ்சு தேசத்தின் லௌகீக இலக்கிய விஷயத்தில், ஜெர்மானிய இலக்கிய கர்த்தாக்கள் இதே காரியத்தைத் தலைகீழாகச் சாதித்துவிட்டனர். பிரெஞ்சு மூலத்தின் அடியில் அவர்கள் தமது தத்துவார்த்த அபத்தத்தை எழுதினார்கள். உதாரணமாக, பணத்தின் பொருளாதாரக் கடமைகளைக் குறித்துப் பிரெஞ்சுகாரர்கள் செய்த விமர்சனத்தின் அடியில், அவர்கள் "மனிதனிடமிருந்து மனிதத்தன்மையை அகற்றுதல்" என்று எழுதினார்கள். பூர்ஷ்வா அரசு சம்பந்தமான பிரெஞ்சு விமர்சனத்துக்கு அடியில், அவர்கள், "பொதுமை என்ற தரத்தின் வீழ்ச்சி" என்று எழுதினர். மற்றும் இதுபோலப் பலவற்றை எழுதினர்.

பிரெஞ்சு மொழியிலிருந்த சரித்திரபூர்வமான விமர்சனங்களுக்குப் பின்னால், இத்தகைய தத்துவார்த்த சொற்றொடர்களைப் புகுத்துவதைத்தான் "செயலுக்கான தத்துவ ஞானம்", "நிஜ சோஷலிஸம்", "சோஷலிஸத்தின் ஜெர்மானிய விஞ்ஞானம்,"

"சோஷலிஸத்தின் தத்துவ அடிப்படை" என்றெல்லாம் பெயரிட்டனர்.

இவ்வாருக, பிரெஞ்சு சோஷலிஸ்ட் கம்யூனிஸ்ட் இலக்கியம் முழுமையும் பூர்ணமாக ஆண்மை இழக்கச் செய்தனர். மேலும், அந்த ஜர்மானிய எழுத்தாளன் கையில், ஒரு வர்க்கத்துக்கு எதிராக இன்னொரு வர்க்கம் நடத்தும் போராட்டத்தைப் பிரதிபலிக்கும் தன்மையை அது இழந்துவிட்டதால், "பிரஞ்சுக்காரரின் ஒருதலைப்பட்சப் பார்வை"யை அகற்றிவிட்டதாக அந்த ஜெர்மானியன் கருதினுன். உண்மையான தேவைகளை யல்ல, உண்மையின் தேவைகளைப் பிரதிநிதித்துவப்படுத்துவதாக அவன் கருதினுன்; தொழிலாளி வர்க்க நலவுரிமைகளையல்ல, மனித இயல்பின் நலன்களைப் பிரதிபலிப்பதாக அவன் கருதினுன். எந்த வர்க்கத்திலும் சேராத, எவ்வித யதார்த்தத் தன்மையுமில்லாத பொதுப்படையான மனிதனின் நலன்களை, பனி மூடிய, தத்துவார்த்தக் கற்பனையின் ராஜ்யத்தில் மட்டும் வாழக்கூடிய பொதுப்படையான மனிதனின் நலன்களைப் பிரதிபலிப்பதாக அவன் கருதினுன்.

ஒரு பள்ளிப் பையன் செய்யக்கூடிய இந்த வேலையை, ஜெர்மானிய சோஷலிஸம் மிகுந்த அக்கரையுடனும் பயபக்தியுடனும் எடுத்துக்கொண்டது; தன் அற்பமான சரக்கை வாய் வீச்சடித்து வானளாவப் புகழ்ந்தது. ஆனுல், அதன் ஜீரணமாகாத படிப்பின் மமதையில் அடங்கியிருந்த வெகுளித்தனத்தை அது படிப்படியாக இழந்துவிட்டது.

ஜெர்மானிய பூர்ஷ்வா வர்க்கம், குறிப்பாக பிரஷ்ய பூர்ஷ்வா வர்க்கம், பிரபுத்துவ சீமான்களின் வர்க்கத்தையும் யதேச்சாதிகார முடியாட்சியையும் எதிர்த்து நடத்திய போராட்டம், அதாவது லிபரெல் இயக்கம் மேலும் வலுவடைந்தது.

இதன்மூலம், நீண்ட காலமாக விரும்பி எதிர்பார்த்த சந்தர்ப்பம், 'நிஜ' சோஷலிஸத்துக் கிடைத்தது; அரசியல் இயக்கத்துக்கு எதிராக சோஷலிஸ்ட் கோரிக்கைகளை முன்வைக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது; மிதவாதத்துக்கு எதிராக, பிரதிநிதித்துவ சர்க்காருக்கு எதிராக பூர்ஷ்வா போட்டி, பூர்ஷ்வா பத்திரிகை உரிமை, பூர்ஷ்வா சட்டம், பூர்ஷ்வா உரிமை, பூர்ஷ்வா சமத்துவம்

ஆகியவற்றுக்கு எதிராக, பாரம்பரைச் சாபங்களை வீசுவதற்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்த பூர்ஷ்வா இயக்கத்தின் மூலம் அனைத்தையும் இழப்பீர்களென்றும், ஒருவகை ஆதாயமும் பெற மாட்டீர்களென்றும் பொதுமக்களுக்குப் பிரசாரம் செய்யும் சந்தர்ப்பம் கிடைத்தது. பிரெஞ்சு விமர்சனத்தின் இழிவான எதிரொலியாகவிருந்த ஜெர்மானிய சோஷலிஸம், சரியான நேரத்தில், ஒரு விஷயத்தை மறந்துவிட்டது. அதாவது, நவீன பூர்ஷ்வா சமூகம் தனக்கு உகந்த பொருளாதார வாழ்க்கை நிலைமைகளுடனும் தனக்குத் தகுதியான அரசியல் சட்டத்துடனும் முன்பே ஏற்பட்டிருப்பதைப் பிரெஞ்சு விமர்சனம் அடிப்படையாகக்கொண்டதென்பதையும், அத்தகைய நிலைமைகளை இனிமேல் அடைவதற்காகவே ஜெர்மனியில் போராட்டம் நடக்கிறது என்பதையும் அது மறந்துவிட்டது.

பாதிரிகளையும் பேராசிரியர்களையும் நாட்டுப்புறக் கனவான்களையும் அதிகாரிகளையும் பின்பற்றுவோராகப் பெற்ற யதேச்சாதிகார சர்க்கார்களுக்கு, இந்த "ஜெர்மானிய சோஷலிஸம்" தங்களைப் பயமுறுத்தும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராகப் பீதி பரப்பும் பூச்சாண்டியாகப் பயன்பட்டது; வரவேற்கத்தக்க கருவியாகப் பயன்பட்டது.

இதே சர்க்கார்கள் ஜெர்மானியத் தொழிலாளி வர்க்க எழுச்சிகளைக் கசையடிகள், துப்பாக்கிக் குண்டுகள் ஆகியவற்றால் தாக்கி அவை அடங்கச்செய்தன. அந்தக் கசப்பான மாத்திரைகளுக்குப் பின், கடைசி இனிப்பாக இந்த வகை சோஷலிஸம் பயன்பட்டது.

இந்த 'நிஜ' சோஷலிஸம் இவ்வாறாக ஜெர்மானிய பூர்ஷ்வா வர்க்கத்தை எதிர்த்துப் போராடுவதற்கான கருவியாகச் சர்க்கார்களுக்குப் பயன்பட்டது; அதே சமயத்தில் அது ஒரு பிற்போக்கான நலனை, ஜெர்மனியின் பண்படாத அரைகுறை அறிவாளிகளின் நலனை, நேரடியாகப் பிரதிபலித்தது. பதினாறும் நூற்றாண்டின் மிச்சசொச்சமாக விருந்ததும், மீண்டும் மீண்டும் இடைவிடாமல் பல்வேறு வடிவங்களில் தோன்றிக்கொண்டிருப்பதுமான குட்டிபூர்ஷ்வா வர்க்கமே ஜெர்மனியின் தற்கால நிலைமைக்கு யதார்த்த சமூக அடிப்படையாகவிருக்கிறது.

இந்த வர்க்கத்தைப் பாதுகாப்பதென்ருல், ஜெர்மனியின் இன்றைய நிலைமையைப் பாதுகாப்பதாகும். அதை நிச்சயமாக அழிக்கக்கூடிய அபாயத்தை பூர்ஷ்வா வர்க்கத்தின் தொழில் ஆதிக்கமும் அரசியல் ஆதிக்கமும் உண்டாக்கியது. ஒருபுறத்தில் மூலதனம் ஒருசிலரிடம் குவிவதின்மூலமும் மறுபுறத்தில் புரட்சித் தன்மை கொண்ட தொழிலாளி வர்க்கம் உதயமாவதின் மூலமும் இந்த அபாயம் ஏற்பட்டது. இந்த இரண்டு பறவைகளையும் ஒரே கல்லால் அடித்து வீழ்த்தக்கூடியதாக 'நிஜ' சோஷலிஸம் தோன்றியது. அது ஒரு தொத்துநோயைப் போலப் பரவியது.

ஜெர்மானிய சோஷலிஸ்ட்கள், சிலந்தியின் கூட்டைப் போன்ற சிக்கல் நிறைந்த மனோராஜ்ய பட்டாடையால்—அலங்கார அடுக்கு மொழிகள் என்ற மலர்களைக் கொண்டு சித்திரவேலை செய்யப்பட்டதும் அனுரோக்கியமான உணர்ச்சியின் பனித்துளிகளில் தோய்த்தெடுக்கப்பட்டதுமான அந்த அறிவுக்கு அப்பாற்பட்ட அதிசயப் பட்டாடையால்—எலும்பும் தோலுமாகவிருந்த தமது கேவலமான 'நிரந்தர உண்மைகளை' மூடிப் போர்த்தினுர்கள். இந்த அலங்கார ஆடை, மேற்சொன்ன வகைப்பட்ட ஜனங்களிடையில் அவர்களுடைய சரக்குகளின் விற்பனையை அதிசயிக்கத் தக்க அளவு அதிகரிப்பதற்கு உதவியது.

தன்னைப் பொறுத்தமட்டிலும், ஜெர்மன் சோஷலிஸம், குட்டி பூர்ஷ்வா அரைகுறை அறிஞர்களின் (சாரமில்லாத) ஆடம்பர ஒளியாகத் திகழ்வதே தன் தொழில் என்பதை மேன்மேலும் உணர்ந்தது. ஜெர்மானிய இனமே முன்மாதிரியான இனமென்றும் ஜெர்மனியின் அற்பத்தனம் மிகுந்த அரைகுறை அறிஞனே உதாரண புருஷனென்றும் அது பறைசாற்றியது. இந்த முன்மாதிரி புருஷனின் துஷ்டத்தனம் மிகுந்த இழிவுகள் ஒவ்வொன்றுக்கும் அதன் யதார்த்தத் தன்மைக்கு நேர்விரோதமான, ஒரு உயர்ந்த, சோஷலிஸ்ட் தன்மை வாய்ந்த மறைபொருள் இருப்பதாக வியாக்கியானத்தைக் கொடுத்தது. கம்யூனிஸத்தின் 'மிருகத்தனமான அழிவு'ப் போக்கை நேரடியாக எதிர்க்கும் அளவுக்கு, சகல வர்க்கப் போராட்டங்களையும் பாரபட்சமில்லாமல் அடியோடு வெறுப்பதாகப் பறைசாற்றும் அளவுக்கு அது சென்றது. சோஷலிஸ்ட் கம்

யூனிஸ்ட் நூல்களென்று இப்பொழுது (1847) ஜெர்மனியில் நடமாடுவன எல்லாம்—சில விதிவிலக்குகள் நீங்கலாக—இந்த அருவருப்பான இலக்கியத்தையே, இந்த ஆண்மையை அழிக்கும் இலக்கியத்தையே சேர்ந்தவை.*

## 2. கன்சர்வேடிவ் சோஷலிஸம் அல்லது பூர்ஷ்வா சோஷலிஸம்

பூர்ஷ்வா சமூகம் தொடர்ந்திருப்பதை உறுதிப்படுத்துவதற்காக, சமூகக் குறைகளை அகற்ற வேண்டுமென்று பூர்ஷ்வா வர்க்கத்தின் ஒரு பகுதி ஆசைப்படுகிறது.

பொருளாதார நிபுணர்களும் பரோபகாரிகளும் மனிதாபிமானிகளும், தொழிலாளிவர்க்க நிலையைச் சீர்திருத்த விரும்புவோரும், தர்மம் நடத்துகிறவர்களும், மிருகங்களுக்குக் கொடுமை இழைப்பதைத் தடுக்க விரும்பும் ஜீவகாருண்ய சங்க உறுப்பினர்களும், தன்னடக்க வைராக்கிய வீரர்களும், மூலைமுடுக்குகளில் சீர்திருத்தம் செய்ய விரும்பும் பலவகைப்பட்ட பேர்வழிகளும் இந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள். மேலும், இந்த சோஷலிஸமுறை, பூர்த்தியான ஏற்பாடுகளாக வகுக்கப்பட்டுள்ளது.

பிரௌதன் எழுதிய '**பிலாஸபி டலா மிஸரீ**' (வறுமையின் தத்துவம்) என்ற நூலை இதற்கு ஒரு உதாரணமாகக் கூறலாம்.

நவீன சமுதாய நிலைமைகளிலிருந்து தவிர்க்க முடியாமல் விளைகின்ற போராட்டங்களும் அபாயங்களும் இல்லாத வகையில், அந்த நவீன சமூக நிலைமைகளின் அனுகூலங்கள் அனைத்தும் வேண்டுமென்று சோஷலிஸ்ட் பூர்ஷ்வாக்கள் விரும்புகின்றனர். இன்றைய நிலைமையைச் சிதைக்கும் புரட்சி அம்சங்கள் இல்லா

---

*1848ம் ஆண்டில் வீசிய புரட்சிப்புயல் இந்த இழிவுப் போக்கு முழுவதையும் துடைத்தொழித்தது. அதன் பிரதான புருஷர்களுக்கு, அதன் பிறகு சோஷலிஸத்தில் தலையிடும் ஆர்வம் ஏற்படாதவாறு அந்த புரட்சிப் புயல் செய்தது. இந்தப் போக்குக்கு உதாரண புருஷனாகவும் பிரதானமானவராகவும் 'ஹெர் காரல் குருன்' என்பவர் விளங்கினர்.

(1890ம் ஆண்டு ஜெர்மானியப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு.)

மல், இன்றைய நிலைமை நீடிக்கவேண்டுமென்பது அவர்களுடைய ஆசை. இயல்பாகவே, தான் மேலாதிக்கம் வகிக்கக்கூடிய உலகமே தலைசிறந்ததென்று பூர்ஷ்வா வர்க்கம் கருதுகிறது; இந்த வசதியான கருத்தை ஏறக்குறைய பூர்த்தியான பல்வேறு ஏற்பாடுகளாக பூர்ஷ்வா சோஷலிஸம் உருவாக்குகிறது. அத்தகைய ஒரு ஏற்பாட்டை நிறைவேற்ற வேண்டுமென்றும் அதன் மூலம் ஒரு விமோசனமடைந்த புதிய சமுதாயத்தை நோக்கி, நேரடியாகச் செல்ல வேண்டுமென்றும் அது தொழிலாளி வர்க்கத்திடம் கோரும்பொழுது, அது உண்மையில் கோருவது என்னவெனில், தொழிலாளி வர்க்கம் இன்றைய சமூகத்தின் வரம்புகளுக்குட்பட்டிருக்க வேண்டுமென்பதே; பூர்ஷ்வா வர்க்கத்தைப் பற்றி அது கொண்டிருக்கும் வெறுக்கத்தக்க கருத்துக்களை கைவிட வேண்டுமென்பதே.

இந்த சோஷலிஸத்தின் இன்னொரு வகை, முந்தையதைவிற அனுபவசாத்தியமானது; ஆனால் முந்தையதைப்போல முறைப் படுத்தப்படாதது. அரசியல் சீர்திருத்தம் மட்டும் தொழிலாளி வர்க்கத்துக்கு எத்தகைய அனுகூலத்தை அளிக்காதென்றும் பௌதீக வாழ்க்கை நிலைமைகளில், பொருளாதார நிலைமைகளில் மாறுதல் ஏற்பட்டால்தான் தொழிலாளி வர்க்கத்துக்கு அனுகூலம் ஏற்படுமென்றும் அது கூறிற்று; அதன்மூலம் ஒவ்வொரு புரட்சி இயக்கத்தையும் தொழிலாளி வர்க்கத்தின் பார்வையில் கேவலப் படுத்த முயன்றது. பௌதீக வாழ்க்கை நிலைமைகளில் மாறுதல் வேண்டுமென்று கூறும்பொழுது, இந்த வகை சோஷலிஸம் அதை எப்படிப் புரிந்துகொள்கிறது? பூர்ஷ்வாப் பொருளுற்பத்தி உறவுகளை ஒழிக்கவேண்டுமென்று, புரட்சியின் மூலமே சாதிக்கக் கூடிய இதைச் செய்யவேண்டுமென்று அது ஒருபொழுதும் கருதவில்லை. அதற்கு மாருக, இந்த உறவுகள் தொடர்ந்திருப்பதன் அடிப்படையில் நிர்வாகச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென்று அது கருதுகிறது. எனவே, இந்தச் சீர்திருத்தங்கள், மூலதனத்துக்கும் உழைப்புக்குமிடையே உள்ள உறவுகளை எவ்வகையிலும் பாதிக்காதவையாகும். அதிகப்பட்சமாகப் போனல், அவை பூர்ஷ்வா சர்க்காரின் செலவைக் குறைக்கும்; அதன் நிர்வாக வேலையை எளிதாக்கும்.

பூர்ஷ்வா சோஷலிஸம் என்பது ஒரு சொல்லணியாக மட்டும் விளங்கினுல்தான், அது தனக்குத் தேவையான வெளியீட்டைப் பெறுகிறது.

வர்த்தக சுதந்திரம்: தொழிலாளி வர்க்க நலனுக்காக; காப்பு வரிகள்: தொழிலாளி வர்க்க நலனுக்காக; சிறைச் சீர்திருத்தம்: தொழிலாளி வர்க்க நலனுக்காக. இதுவே பூர்ஷ்வா சோஷலிஸத்தின் முடிவான கருத்து; பொருளாழம் கொண்ட ஒரே கருத்து.

தொழிலாளி வர்க்க நலனுக்காகவே பூர்ஷ்வா பூர்ஷ்வாவாக இருக்கிருன் என்ற ஒரே வாக்கியத்தில் பூர்ஷ்வா சோஷலிஸத்தை அடக்கிவிடலாம்.

## 3. விமர்சன - கற்பனுவாத சோஷலிஸமும் விமர்சன - கற்பனுவாத கம்யூனிஸமும்

ஒவ்வொரு மகத்தான நவீனப் புரட்சியிலும் தொழிலாளி வர்க்கத்தின் கோரிக்கைகளை எப்பொழுதும் வற்புறுத்தி வந்திருக்கும் இலக்கியத்தைக் குறித்து, அதாவது, பாபூவ் என்பவரும் அவர் போன்ற மற்றவர்களும் எழுதிய நூல்களைக் குறித்து, நாம் இங்கு சொல்லவில்லை.

பிரபுத்துவ சமூகம் வீழ்த்தப்பட்டபொழுது, எங்கும் பரபரப்பாகவிருந்த அந்தச் சமயங்களில், தொழிலாளி வர்க்கம் தன் சொந்த லட்சியங்களை அடைவதற்காக, நேரடியாக முதல் முயற்சிகளை எடுத்தது; ஆனுல், அப்பொழுது தொழிலாளி வர்க்கம் வளர்ந்திருக்காத காரணத்தாலும், அதன் விமோசனத்துக்குத் தேவையான பொருளாதார நிலைமைகள் இல்லாமல் இருந்ததாலும், அதன் பின்னரே, அடுத்து வரவிருக்கும் பூர்ஷ்வா சகாப்தத்திலேயே, அந்த நிலைமைகள் சிருஷ்டிக்கப்படவேண்டியதாயிருந்ததாலும், அந்த முயற்சிகள் தோற்றன. தொழிலாளி வர்க்கம் நடத்திய இந்த ஆரம்பக்கால இயக்கங்களுடன் தோன்றிய புரட்சி இலக்கியம், தவிர்க்கமுடியாத வகையில், ஒரு பிற்போக்கான தன்மையைக் கொண்டிருந்தது. எல்லோரும் சன்னியாசிகள் மாதிரி வாழவேண்டுமென்றும் சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வு

களைச் சமமாக்க வேண்டுமென்றும் அது மிகக் கொச்சையான வகையில் வலியுறுத்திப் பதிய வைத்தது.

சோஷலிஸ்ட் கம்யூனிஸ்ட் ஏற்பாடுகளென்று முறையாக அழைக்கப்பட்டவை செயிண்ட் சைமன், பூரியர், ஓவன் ஆகியோரும் இதரரும் நிறுவிய ஏற்பாடுகள் - மேலே விவரிக்கப்பட்டது போல, பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் தொழிலாளி வர்க்கத்துக்குமிடையே நடைபெறும் போராட்டத்தின் ஆரம்ப கட்டத்தில், வளர்ச்சியடையாத காலகட்டத்தில் ('பூர்ஷ்வாக்களும் தொழிலாளரும்' என்ற முதல் பகுதியைப் பார்க்கவும்) தோன்றின.

இந்த ஏற்பாடுகளின் ஸ்தாபகர்கள், அன்றைய சமூக அமைப்பின் வர்க்க விரோதங்களையும் சிதைத்தழிக்கும் அம்சங்களின் செயலையும் பார்த்தனரென்பது உண்மை. ஆனால் அப்பொழுதும் குழவிப் பருவத்திலிருந்த தொழிலாளி வர்க்கம், எத்தகைய சரித்திர பூர்வமான முன்முயற்சியோ அல்லது எத்தகைய சுயேச்சையான அரசியல் இயக்கமோ கொண்டிராத வர்க்கமாகவே அவர்களுடைய பார்வைக்குப் புலப்பட்டது.

வர்க்கப் பகையின் வளர்ச்சி, தொழில் வளர்ச்சியின் வேகத்துக்கு ஒத்து இருக்கிறபடியால், அவர்கள் பார்வைக்குப் புலப்பட்ட பொருளாதார நிலைமை தொழிலாளி வர்க்க விமோசனத்துக்குத் தேவையான பௌதீக நிலைமைகளை அவர்களுக்கு அதுவரை அளிப்பதாக இல்லை. எனவே, அவர்கள் இந்த நிலைமைகளைச் சிருஷ்டிப்பதற்கான ஒரு புதிய சமுதாய விஞ்ஞானத்தை, புதிய சமூக விதிகளைத் தேடுகிறார்கள்.

சரித்திரபூர்வமான நடவடிக்கை, அவர்களுடைய சொந்த யுக்திபூர்வமான நடவடிக்கைக்கு இடம் தரவேண்டும்; விமோசனத்துக்காகச் சரித்திரபூர்வமாக சிருஷ்டிக்கப்பட்ட நிலைமைகள், நம்பத்தகாத கற்பனை நிலைமைகளுக்கு இடம் தரவேண்டும். தொழிலாளி வர்க்கம் படிப்படியாகத் தன்னுணர்வில்லாமல் ஏற்படுத்திக்கொள்ளும் வர்க்க ஸ்தாபனம், இந்த யுக்தி கர்த்தாக்களால் பிரத்தியேகமாக இயற்றப்பட்ட சமுதாய ஸ்தாபனத்துக்கு இடம் தந்துவிடவேண்டும். தமது சமூகத் திட்டங்களுக்காகப் பிரசாரம் செய்து அவற்றை நிறைவேற்றும் முறையில் எதிர்கால

சரித்திரம் அமையுமென்று அவர்களுடைய பார்வைக்குத் தோன்று கிறது.

மிகவும் அதிகமாகக் கஷ்டப்படும் வர்க்கமாயிருக்கும் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுக்காக முதன்மையாகக் கவலைப்படும் உணர்வுடனே அவர்கள் திட்டங்களை வகுக்கின்றனர். மிகவும் அதிகமாகக் கஷ்டப்படும் வர்க்கமென்ற கண்ணோட்டத்தில் மட்டுமே தொழிலாளி வர்க்கத்தை அவர்கள் புரிய முடிந்தது.

வர்க்கப் போராட்டத்தின் வளராத நிலை காரணமாகவும் அவர்களுடைய சொந்தச் சுற்றுச்சார்பு காரணமாகவும் இந்த வகை சோஷலிஸ்ட்கள், சகல வர்க்க விரோதங்களுக்கும் மிகமிக அப்பாற்பட்டவர்களாகத் தம்மைத் தாமே கணித்துக்கொண்டார்கள். அவர்கள் சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பினருடைய நிலையையும்—மிகவும் அதிகமாக வசதி பெற்றவரின் நிலையைக்கூட—மேம்படுத்த விரும்புகிறார்கள். எனவே, அவர்கள் வாடிக்கையாகவே, சமுதாயம் முழுமைக்கும், வர்க்க பேதம் பாராமல், வேண்டுகோள் விடுக்கிறார்கள். அதுமட்டுமல்ல; ஆளும் வர்க்கத்துக்கு வேண்டுகோள் விடுப்பதையே விசேஷமாக விரும்புகின்றனர். ஏனென்றால், அவர்களுடைய ஏற்பாட்டைப் புரிந்துகொண்டவர்கள், சாத்தியமானவற்றில் தலைசிறந்த சமுதாய நிலையை அடைவதற்குரிய திட்டம் அதுவே என்பதை எப்படிப் பார்க்கத் தவறுவார்கள் ?

எனவே, அவர்கள் சகல அரசியல் நடவடிக்கைகளையும், குறிப்பாக சகல புரட்சிகரமான நடவடிக்கைகளையும் நிராகரிக்கிறார்கள். சமாதான வழிகளில் தமது லட்சியங்களை அடைய அவர்கள் விரும்புகிறார்கள். நிச்சயமாகத் தோல்வி அடையவிருக்கும் சிறு பரீட்சைகள் மூலம், உதாரணத்தின் சக்தியைக்கொண்டு, புதிய சமூதாய வேதத்துக்குப் பாதை வகுக்க முயல்கின்றனர்.

தொழிலாளி வர்க்கம் இன்னும் வளராத நிலையில் இருக்கும் பொழுது, தன் ஸ்தானத்தைக் குறித்து அது நம்பத்தகாத கற்பனைக் கருத்தைக்கொண்டிருக்கும்பொழுது, எதிர்கால சமூகத்தைப்பற்றிய மேற்சொன்ன நம்பத்தகாத கற்பனைகள், சமூகத்தின் பொதுவான புனரமைப்பைக் குறித்து அந்த வர்க்கத்துக்குத் தன்

னியல்பாகத் தோன்றும் ஆரம்ப ஆவல்களுக்கு உகந்தவையாக விருக்கின்றன.

ஆனால், இந்த சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் நூல்களில் ஒரு விமர்சன அம்சமும் இருக்கிறது. தற்கால சமூகத்தின் ஒவ்வொரு கோட்பாட்டையும் அவை தாக்குகின்றன. எனவே, தொழிலாளி வர்க்கம் வெளிச்சம் பெறுவதற்கு அவற்றில் மதிப்பிடற்கரிய விஷயங்கள் நிறைந்திருக்கின்றன. நடைமுறை நடவடிக்கைகள் சம்பந்தமாக அவை முன்வைக்கும் யோசனைகளெல்லாம்—நகரத்துக்கும் நாட்டுப்புறத்துக்கு மிடையேயுள்ள பேதத்தை அகற்றுவது, குடும்ப அமைப்பை ஒழிப்பது, தனிநபர் கணக்கில் தொழில்கள் நடத்துவதை ஒழிப்பது, கூலி அமைப்பை ஒழிப்பது, சமுதாய சௌஜன்யத்தைப் பிரகடனம் செய்வது, அரசாங்கத்தின் கடமைகளை, பொருளுற்பத்தியை மேற்பார்வையிடுவதாக மாற்றிவிடுவது முதலிய யோசனைகளெல்லாம்—வர்க்கப் பகைகள் மறைந்து போவதை மட்டுமே குறிக்கின்றன; அந்த வர்க்க விரோதங்கள் அந்தச் சமயத்தில் அப்பொழுதே முளைத்துக்கொண்டிருந்தன. தெளிவில்லாத, திட்டமாக வரையறுக்கப்படாத ஆரம்பக்கால வடிவத்தில்தான் அந்த வர்க்க விரோதங்களை இந்த நூல்கள் உணர்ந்திருக்கின்றன. எனவே, இந்த யோசனைகள் சுத்தமான, கலப்பில்லாத கற்பனைத் தன்மை கொண்டவையே.

விமர்சன - கற்பனாவாத சோஷலிஸம் விமர்சன - கற்பனாவாத கம்யூனிஸம் ஆகியவற்றின் முக்கியத்துவம், சரித்திரபூர்வமான வளர்ச்சியுடன் தலைகீழ் உறவைக் கொண்டிருக்கிறது. நவீன வர்க்கப் போராட்டம் வளர்ந்து திட்டமான உருவத்தைப் பெறும் அளவுக்குத்தக்கபடி, போராட்டத்திலிருந்து ஒதுங்கிநிற்கும் இந்தக் கற்பிதமான கருத்து, அந்தப் போராட்டத்தின்மீது தொடுக்கப்படும் இந்த கற்பிதமான தாக்குதல்கள் ஆகியவையெல்லாம் நடைமுறை மதிப்பு முழுவதையும் தத்துவ நியாயம் முழுவதையும் இழந்துவிடுகின்றன. எனவே, இந்த ஏற்பாடுகளின் ஸ்தாபகர்கள் பல அம்சங்களில் புரட்சிகரமானவர்களா யிருந்தாலும், அவர்களுடைய சீடர்கள் அனைவரும் வெறும் பிற்போக்கு கோஷ்டிகளையே அமைத்துள்ளனர். தொழிலாளி வர்க்கத்தின் முற்போக்

கான சரித்திரபூர்வமான வளர்ச்சிக்கு எதிராக அவர்கள் தமது குருநாதர்களின் மூலக் கருத்துக்களை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கின்றனர். எனவே, அவர்கள் வர்க்கப் போராட்டத்தைப் பலவீனப்படுத்தி அழிக்கவும் வர்க்க விரோதங்களை ராஜி செய்யவும் முயற்சிக்கின்றனர். அதுவும் முன் பின் முரணில்லாமல் முயல்கின்றனர். இன்றும் அவர்கள் தமது கற்பிதமான சமுதாய ஏற்பாடுகளைப் பரீட்சைகள் மூலம் அடையலாமென்று கனவு காண்கிருர்கள்; தனிமைப்பட்ட *'பலான்ஸ்டியர்களை' ஸ்தாபிக்கலாமென்றும், †'ஹோம் காலனிகளை' 'நிறுவலாமென்றும் 'குட்டி ஐகேரியா'வை ஏற்படுத்தலாமென்றும், அவர்கள் கனவு காண்கின்றனர். இந்த விமோசனம் பெற்ற புதிய சமூகத்தின் குட்டிப் பதிப்புகளை, அமைக்க அவர்கள் கனவு காண்கின்றனர். இந்த ஆகாயக் கோட்டைகளைக் கைகூடச் செய்வதற்காக, அவர்கள் பூர்ஷ்வாக்களின் உணர்ச்சிக்கும் பணத்துக்கும் வேண்டுகோள் விடுக்கவேண்டிய கட்டாயத்துக்கு உட்படுகின்றனர்.

படிப்படியாக அவர்கள் முன்னல் விளக்கப்பட்ட பிற்போக்கான கன்ஸர்வேடிவ் சோஷலிஸ்டுகளின் தரத்துக்குத் தாழ்ந்துவிடுகின்றனர். ஆனல் அவர்களுக்கும் இவர்களுக்குமிடையேயுள்ள ஒரே வித்தியாசம் என்னவென்ருல் அரை வேக்காட்டுப் படிப்பின் மமதை இவர்களிடம் செம்மையாக முறைப்பட்டிருக்கிறது. இவர்கள் தமது சமூக விஞ்ஞானத்தின் அதிசய பலன்

---

* பலான்ஸ்டியர்கள்: சார்லஸ் பூரியர் திட்டப்படி அமைந்த சோஷலிஸ்ட் காலனிகள். காபட் தன் கற்பனை உலகத்துக்கு அளித்த பெயர் ஐகேரியா என்பதாகும். பிற்பாடு அவருடைய அமெரிக்க கம்யூனிஸ்ட் காலனிக்கு அந்தப் பெயரைச் சூட்டினர். (1888ம் ஆண்டு ஆங்கிலப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு.)

† ஹோம் காலனிகள்: ஓவன் தன்னுடைய கம்யூனிஸ்ட் முன் மாதிரி சமூகங்களுக்கு இட்ட பெயர். பலான்ஸ்டியர்கள் என்பது, பூரியர் திட்டமிட்ட பொது மாளிகைகளுக்கு இடப்பட்ட பெயர். ஐகேரியா என்பது கற்பனை நாட்டின் பெயர்; காபெட் அந்தக் கற்பனை தேசத்தின் கம்யூனிஸ்ட் ஸ்தாபனங்களை விவரித்தார், (1890ம் ஆண்டு ஜர்மானியப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு)

களில் மூட நம்பிக்கை கொண்டவர்கள், வெறிபிடிக்கச் செய்யும் நம்பிக்கையைக் கொண்டவர்கள்.

எனவே, தொழிலாளி வர்க்கம் எத்தகைய அரசியல் நடவடிக்கைகள் எடுப்பதையும் அவர்கள் உக்கிரமாக எதிர்க்கிறார்கள். அத்தகைய நடவடிக்கை, புதிய வேதத்தில் நம்பிக்கையில்லாத குருட்டுத்தனத்திலிருந்துதான் ஏற்படமுடியுமென்பது அவர்களுடைய கருத்து.

இங்கிலாந்தில் ஓவனைச் சார்ந்தவர்களும், பிரான்சில் பூரியரைச் சார்ந்தவர்களும், முறையே சார்டிஸ்டுகளையும் *ரிபார்மிஸ்டுகளையும் எதிர்க்கின்றனர்.

---

* பாரிஸ் நகரத்தில் 1843 லிருந்து 1850 வரை, 'ரிபார்ம்' என்ற பத்திரிகை வெளிவந்தது. அந்தப் பத்திரிகையின் ஆதரவாளர்களே ரிபார்மிஸ்டுகளென்று குறிப்பிடப்படுகிறது. (ப-ர்.)

# 4. இன்றுள்ள பல்வேறு எதிர்க்கட்சிகள் சம்பந்தமாக கம்யூனிஸ்ட்களின் நிலை

இங்கிலாந்திலுள்ள சார்ட்டிஸ்டுகள், அமெரிக்காவிலுள்ள நிலச்சீர்திருத்தவாதிகள் ஆகியோரைப்போன்ற தற்காலத் தொழிலாளி வர்க்கக் கட்சிகளுடன் கம்யூனிஸ்டுகளுக்குள்ள உறவுகளை இரண்டாவது பகுதி தெளிவுபடுத்திவிட்டது.

தொழிலாளி வர்க்கத்தின் அவ்வப்போதைய நலவுரிமைகளை நிலைநாட்டவும் உடனடியான லட்சியங்களை அடையவும் கம்யூனிஸ்டுகள் போராடுகிறார்கள். ஆனால் இன்றைய இயக்கத்திலேயே அவர்கள் அந்த இயக்கத்தின் எதிர்காலத்தையும் பிரதிபலிப்பதுடன், அந்த எதிர்காலத்தை ஜாக்கிரதையாக கவனித்தும் வருகின்றனர். பிரான்ஸில் கன்சர்வேடிவ் பூர்ஷ்வாக்களுக்கும் தீவிரவாத பூர்ஷ்வாக்களுக்கும் எதிராக, கம்யூனிஸ்ட்கள் சோஷல் டெமாக்ரட்டுகளுடன்* சேர்ந்து போராடுகிறார்கள். ஆனால், மகத்தான புரட்சியிலிருந்து (1789-ம் ஆண்டு பிரெஞ்சுப் புரட்சி-மொ-ர்) வாழையடி வாழையாக வந்துள்ள சொற்றொடர்களையும் பிரமைகளையும் குறித்து ஒரு விமர்சன நிலையை மேற்கொள்ளும் உரிமையைக் கம்யூனிஸ்ட்டுகள் வைத்திருக்கின்றனர்.

ஸ்விட்ஜர்லாந்தில் அவர்கள் தீவிரவாதிகளை ஆதரிக்கிறார்கள். தீவிரவாதிகளின் கட்சி ஒன்றுக்கொன்று விரோதமான

---

* அந்தக் காலத்தில், லெத்ரு ரோலின் என்பவரால் பார்லிமெண்டிலும் லூயி பிளான்க் என்பவரால் இலக்கியத்திலும், ரிபார்மி என்பதால் தினசரிப் பத்திரிகை யுலகிலும் பிரதிநிதித்துவப்படுத்தப்பட்ட கட்சி அது. சோஷல்-டெமாக்ரஸி என்ற பெயரைக் கண்டுபிடித்த இவர்கள் அந்தச் சொல்லின் மூலம் குறிப்பிட்டது என்னவெனில், ஏறத்தாழ சோஷலிஸ்ட் சாயம் பூசப்பட்ட ஜனநாயகக் கட்சிப் பகுதி அல்லது குடியரசுக் கட்சிப் பகுதி என்பதே. (1888ம் ஆண்டு ஆங்கிலப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு.)

பிரான்ஸின் தன்னைத்தானே சோஷலிஸ்ட்-டெமாக்ரடிக் கட்சி என்று அழைத்துக்கொண்ட கட்சி, அரசியல் வாழ்க்கையில் லெட்டு-ரோலின் என்பவராலும் இலக்கியத்தில் லூயி பிளான்க் என்பவராலும் பிரதிநிதித்துவப் படுத்தப்பட்டது. இவ்வாறாக, இன்றைய ஜெர்மானிய சோஷல்-டெமாக்ரஸிக்கும் அதற்கும் அளவிடமுடியாத வேறுபாடு உண்டு. (1890-ம் ஆண்டு ஜெர்மானியப் பதிப்புக்கு எங்கல்ஸ் குறிப்பு.)

அம்சங்களைக் கொண்டிருக்கிறது. அதில் ஒரு பகுதியினர் பிரஞ்சு அர்த்தத்தில், ஜனநாயக சோஷலிஸ்டுகளாக விருக்கிறார்கள்; இன்னொரு பகுதியினர் தீவிர முதலாளிகளாயிருக்கிறார்கள். தீவிரவாதிகளை ஆதரிக்கும்பொழுது, கம்யூனிஸ்டுகள் இந்த உண்மையைச் சற்றும் மறப்பதில்லை.

போலந்தில், தேச விமோசனத்திற்கு விவசாயப் புரட்சியே முதல் நிபந்தனை என்று வற்புறுத்தும் கட்சியை, 1846-ல் கிராகோவில் நடைபெற்ற ஆயுதமேந்திய எழுச்சிக்குத் தூண்டுகோலாக விருந்த கட்சியை அவர்கள் ஆதரிக்கிறார்கள்.

ஜெர்மனியில், யதேச்சாதிகார முடியாட்சிக்கும் பிரபுத்துவ கனவான்களின் முறைக்கும் *குட்டி பூர்ஷ்வாக்களுக்கும் எதிராக பூர்ஷ்வா வர்க்கம் புரட்சிகரமான முறையில் செயலாற்றும் பொழுதெல்லாம், அந்த பூர்ஷ்வாக்களுடன் சேர்ந்து நின்று கம்யூனிஸ்டுகள் போராடுகின்றனர்.

ஆனால் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் தொழிலாளி வர்க்கத்துக்குமிடையேயுள்ள பகையைத் தொழிலாளி வர்க்கம் சாத்தியமான அளவுக்கு உணரும்படி செய்வதை அவர்கள் ஒருபொழுதும் நிறுத்தவில்லை. பூர்ஷ்வா வர்க்கம் தன் மேலாதிக்கத்துடன் கூடவே தவிர்க்க முடியாதவகையில் ஏற்படுத்தும் அரசியல், சமுதாய நிலைமைகளைத் தமது ஆயுதங்களாக ஜெர்மானியத் தொழிலாளிகள் பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிராகப் பயன்படுத்தவேண்டுமென்பதற்காக, ஜெர்மனியில் பிற்போக்கான வர்க்கங்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, பூர்ஷ்வா வர்க்கத்தையே எதிர்க்கும் போராட்டம் உடனடியாகத் தொடங்க வேண்டுமென்பதற்காகக் கம்யூனிஸ்டுகள் அவ்வாறு செய்கின்றனர்.

கம்யூனிஸ்ட்கள் ஜெர்மனியின்மீது தங்கள் முக்கிய கவனத்தைச் செலுத்துகின்றனர். ஏனென்றால் பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்திலும், பதினெட்டாம் நூற்றாண்டில் பிரான்ஸிலும் பூர்ஷ்வா புரட்சி நடைபெற்றபொழுது இருந்ததைவிட ஐரோப்

* ஜெர்மானிய மூலத்தில், கிளைன்புர்கரி என்ற சொல்லை மார்க்ஸும் எங்கல்ஸும் உபயோகிக்கிறார்கள். நகர குட்டி பூர்ஷ்வாக்களின் பிற்போக்கு அம்சங்களை குறிப்பிடுவதற்காக அதை உபயோகித்தார்கள். (ப-ர்.)

பிய நாகரீகம் அதிக வளர்ச்சிபெற்றுள்ள சூழ்நிலையில், மேலும் அதிகமான வளர்ச்சியைப் பெற்ற தொழிலாளி வர்க்கம் உள்ள நிலையில், ஜெர்மனியில் ஒரு பூர்ஷ்வா புரட்சி நடைபெறவிருக்கிறது. மேலும் ஜெர்மனியின் பூர்ஷ்வா புரட்சி, உடனடியாகப் பின்தொடரவிருக்கும் தொழிலாளிவர்க்கப் புரட்சியின் பீடிகையாகவேயிருக்கும்.

சுருங்கக் கூறினல் ஒவ்வொரு இடத்திலும் இன்றைய சமூக அரசியல் நிலைமைகளின் அமைப்புக்கு எதிரான ஒவ்வொரு புரட்சிகாமான இயக்கத்தையும் கம்யூனிஸ்ட்கள் ஆதரிக்கின்றனர்.

இந்த இயங்கங்களிலெல்லாம் அவை ஒவ்வொன்றின் பிரதானப் பிரச்சினையாக, உடைமைப் பிரச்னையை, அது எந்த அளவுக்கு அந்தச் சமயத்தில் பக்குவமடைந்திருக்கிற தென்பதைப் பொருட்படுத்தாமல், அவர்கள் முன்னணிக்குக் கொண்டுவருகின்றனர்.

இறுதியாக, அவர்கள் சகல நாடுகளின் ஜனநாயகக் கட்சிகளுடைய உடன்பாட்டுக்காகவும் ஐக்கியத்துக்காகவும் ஒவ்வொரு இடத்திலும் பாடுபடுகின்றனர்.

தமது கருத்துக்களையும் லட்சியங்களையும் மறைத்துவைப்பதைக் கம்யூனிஸ்ட்கள் இழிவாகக் கருதுகிருர்கள். இன்றைய சமுதாய நிலைமைகள் அனைத்தையும் பலவந்தமாக வீழ்த்தினல் தான், தமது லட்சியங்களை அடையமுடியுமென்று அவர்கள் பகிரங்கமாகப் பிரகடனஞ் செய்கிருர்கள். ஒரு கம்யூனிஸ்ட் புரட்சியை நினைத்து ஆளும் வர்க்கங்கள் நடுங்கட்டும்! தொழிலாளர்களுக்குத் தமது அடிமைத் தளைகளைத் தவிர இழப்பதற்கு வேறொன்றுமில்லை. அவர்கள் வெல்வதற்கு ஒரு உலகம் இருக்கிறது.

உலகத் தொழிலாளர்களே ஒன்றுபடுங்கள்!

# அனுபந்தம்

## 1872-ம் வருஷத்து ஜெர்மானிய பதிப்பின் முகவுரை

கம்யூனிஸ்ட் சங்கம் என்பது ஒரு சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம்; அது, இயல்பாகவே, அன்றைய சூழ்நிலையில், ஒரு ரகசிய ஸ்தாபனமாகவே இருக்க முடிந்தது. 1847 நவம்பரில் கூடிய அந்தச் சங்கத்தின் காங்கிரஸ், கட்சியின் தத்துவார்த்த, நடைமுறைத் திட்டத்தை விவரமாக விளக்கி, வெளியிடுவதற்காகத் தயாரிக்கும்படி, கீழே கையொப்பமிட்டுள்ளவர்களை பணித்தது. பின்வரும் அறிக்கை இவ்வாறு தோன்றியது; *பிப்ரவரி புரட்சிக்குச் சில வாரங்களுக்கு முன்னுல், இந்த அறிக்கையை அச்சிடுவதற்காக, கைப்பிரதி லண்டனுக்கு அனுப்பப்பட்டது. அது முதலில் ஜெர்மானிய மொழியில் வெளிவந்தது; ஜெர்மனியிலும் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அதே மொழியில் குறைந்தபட்சம் பன்னிரண்டு வெவ்வேறு பதிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன; முதன் முதலாக 1850ல், அது ஆங்கிலத்தில், 'ரேட் ரிபப்ளிகன்' (சிவப்புக் குடியரசு வாதி என்று பொருள்படும் மொ-ர்.) என்ற லண்டன் பத்திரிகையில் பிரசுரமாயிற்று. திருமதி ஹெலன் மாக் பார்லேன் என்பவரின் மொழி பெயர்ப்பு அது. 1871ல் அமெரிக்காவில் குறைந்தபட்சம் மூன்று தனித்தனி ஆங்கில மொழி பெயர்ப்புகள் வெளிவந்தன. 1848ம் ஆண்டு ஜூன் மாதப் புரட்சிக் கலகத்துக்குச் சற்றுமுன், முதல் பிரெஞ்சுப் பதிப்பு பாரிஸ் நகரத்தில் வெளிவந்தது. சமீபத்தில், நியூயார்க் நகரத்திலிருந்து வரும் **சோஷலிஸ்ட்** (சோஷலிஸ்ட் என்று பொருள்படும் பிரெஞ்சுச் சொல்-மொர்.) என்ற பத்திரிகையிலும் வெளி வந்திருக்கிறது. ஒரு புதிய மொழிபெயர்ப்பு இப்பொழுது தயாராகிக் கொண்டிருக்கிறது. முதலில் ஜெர்மானிய மொழியில் பதிப்பிக்கப்பட்டவுடனேயே, லண்டனில் ஒரு போலிஷ் பதிப்பு பிர

---

* 1848ல் பிரான்ஸ் நாட்டில் நடைபெற்ற பிப்ரவரி புரட்சி.

சுரமாயிற்று. 1860-69 ஆண்டுகளில், ஒரு ருஷ்யப் பதிப்பு ஜினீவா நகரத்திலிருந்து பிரசுரிக்கப்பட்டது. முதலில் வெளிவந்தவுடனேயே அது டேனிஷ் பாஷையிலும் மொழிபெயர்க்கப்பட்டது.

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நிலைமை எவ்வளவு மாறியிருந்தபோதிலும், இந்த அறிக்கையில் வகுக்கப்பட்டுள்ள பொதுவான கோட்பாடுகளை முழுமையாகப் பார்த்தால், அவை என்றும்போல் இன்றும் பிசகற்றவை; இங்கும் அங்கும் சில விவரங்களைச் செம்மைப்படுத்தலாம். அறிக்கையே கூறுவதைப்போல, இந்தக் கோட்பாடுகளை நடைமுறையில் கடைப்பிடிக்கும் விஷயம், எந்த இடத்திலும்சரி, எந்தக் காலத்திலும்சரி, அந்தந்தக் காலகட்டத்தின் சரித்திர பூர்வமான நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது. எனவே, இரண்டாவது பகுதியின் இறுதியில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கும் புரட்சிகரமான நடவடிக்கைகள் விசேஷமாக வலியுறுத்தப்படவில்லை. இன்று, அந்தப் பகுதி, பல அம்சங்களில், வேறு வாசகங்களைக் கொண்டிருக்கவேண்டும். கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நவீனத் தொழில் பிரமாதமான முன்னேற்றங்களை அடைந்து வருகிறது; அவற்றுடன் கூடவே தொழிலாளிவர்க்கத்தின் கட்சி ஸ்தாபனம் விரிவடைந்தும் வளர்ந்தும் வருகிறது. இவற்றையும், இவற்றுடன்கூட, முதலில் பிப்ரவரிப் புரட்சியிலும், பிறகு அதற்கும் மேலாக, தொழிலாளிவர்க்கம் முதன்முதலாக இரண்டு முழுமாதங்கள் அரசியல் அதிகாரத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டிருந்த பாரிஸ் கம்யூனிலும் கிடைத்துள்ள நடைமுறை அனுபவத்தையும் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்த்தால், சில விவரங்களில் இந்தத் திட்டம் காலாவதியாகிவிட்டது என்பது விளங்கும். குறிப்பாக ஒரு விஷயத்தை கம்யூன் மெய்ப்பித்தது; அதாவது, தயாராயுள்ள அரசாங்க யந்திரத்தைத் தொழிலாளிவர்க்கம் அப்படியே எடுத்துக்கொண்டு, தன் குறிக்கோளுக்காகப் பயன்படுத்த முடியாது". ["பிரான்ஸில் உள் நாட்டு யுத்தம்" (லண்டன், 1871) என்ற நூலில் இந்தக் கருத்து மேலும் விவரமாக ஆராயப்பட்டிருக்கிறது.] மேலும், சோஷலிஸ்ட் இலக்கியத்தைக் குறித்து 1847ம் ஆண்டுவரை மட்டுமே விமர்சித்திருக்கிறபடியால், இன்றைய நிலைக்கு அந்த விமர்சனம் பூர்த்தியானதாயில்லையென்பது வெளிப்படையாகும். மேலும், பல்வேறு எதிர்க்

கட்சிகளுடன் கம்யூனிஸ்ட்களுக்குள்ள உறவுகள் பற்றிய குறிப்புகள் (நான்காவது பகுதி) இன்றும் கோட்பாடு ரீதியில் பிசகற்றவையாக விருந்தபோதிலும், நடைமுறையில் அவை வழக்கொழிந்தவையாகிவிட்டன என்பது வெளிப்படை. ஏனென்ருல், அரசியல் நிலைமை முழுமையும் மாறிவிட்டது; சரித்திரத்தின் முன்னேற்றம் அங்கு குறிப்பிட்டுள்ள அரசியல் கட்சிகளில் பெரும்பாலானவற்றை வழித்தெறிந்துவிட்டது.

ஆனல், இந்த அறிக்கை ஒரு சரித்திரபூர்வமான தஸ்தவேஜியாகிவிட்டது. இனி அதை மாற்றுவதற்கு எங்களுக்கு எத்தகைய உரிமையும் கிடையாது. 1847 லிருந்து இன்றுவரையுள்ள இடைக்காலத்தைப் பூர்த்தி செய்யும் முன்னுரையுடன் ஒரு பதிப்பு பின்னல் தோன்றலாம்; அதை இப்பொழுது செய்வதற்குப் போதுமான அவகாசமில்லாத வகையில், எதிர்பாராத நிலையில், இந்த மறு பதிப்புத் தோன்றியது.

லண்டன்,
1872 ஜூன் 24.

**காரல் மார்க்ஸ், பிரெடரிக் எங்கல்ஸ்.**

# 1882-ம் வருஷத்து ருஷியப் பதிப்பின் முகவுரை

"கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை"யின் முதல் ருஷ்யப் பதிப்பு, 1860–69 ஆண்டுகளின் *முற்பகுதியில், கோலோகால் சஞ்சிகையின் அச்சகத்திலிருந்து வெளிவந்தது. அது பாக்குனின் என்பவரின் மொழிபெயர்ப்பாகும். அந்த ருஷியப் பதிப்பை மேல் நாட்டார் ஒரு இலக்கிய விந்தையாகவே கருதினர்கள். இன்று அவ்வாறு கருதமுடியாது.

அந்தக் காலத்தில் (1847 டிசம்பர்) தொழிலாளி வர்க்க இயக்கம் எவ்வளவு குறுகிய வரம்புக்குட் பட்டிருந்தது என்பதை, அறிக்கையின் கடைசிப்பகுதி—பல்வேறு நாடுகளில் வெவ்வேறு எதிர்க்கட்சிகளுடன் கம்யூனிஸ்டுகளுக்குள்ள உறவுகளைப்பற்றி கூறும் பகுதி—மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. ருஷ்யாவையும் ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்ற தேசத்தையும்தான் அங்குக் குறிப்பிடவேயில்லை. அந்தச் சமயத்தில், சகல வகைப்பட்ட ஐரோப்பிய பிற்போக்குத்தன்மைகளுக்கும் ருஷ்யா கடைசிப்பெருந் துணைப்பலமாக விருந்தது; ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்ற தேசமோ ஐரோப்பாவில் உபரியாக விருந்த உழைப்பாளிகள் குடியேறுவதற்கு இடம் தந்தது. இரு நாடுகளும் ஐரோப்பாவுக்கு மூலப் பொருட்களைக் கொடுத்து உதவின; அதே சமயத்தில், அவை, ஐரோப்பாவின் தொழிலுற்பத்திப் பண்டங்களின் விற்பனைச் சந்தைகளாகவும் விளங்கின. ஆகவே, அந்தச் சமயத்தில், அவை, ஒருவகையிலோ மற்றொரு வகையிலோ அப்பொழுது நிலவிய ஐரோப்பிய அமைப்புக்குத் தூண்களாக விளங்கின.

இன்று நிலைமை எவ்வளவு மாறுபட்டுவிட்டது! வடஅமெரிக்காவில் ஐரோப்பியர்கள் குடியேறியதன் பலனாகவே, அது பிரமாதமான அளவில் விவசாய உற்பத்தி செய்வதற்குத் தகுதிபெற்றது. இந்த விவசாய உற்பத்தியின் போட்டி, ஐரோப்பாவின் பெரிய

---

* இங்குக் குறிப்பிடப்படும் பதிப்பு 1869ல் தான் வெளி வந்தது. இங்கும் சரி, 1888-ம் ஆண்டில் வெளியான ஆங்கிலப் பதிப்புக்கும் ஏங்கல்ஸ் எழுதிய முகவுரையிலும் சரி, இந்த ருஷ்யப் பதிப்பின் தேதி தவறாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. (ப-ர்.)

சிறிய நில உடைமைகளின் அஸ்திவாரங்களேயே ஆட்டிக்கொண்டிருக்கிறது. மேலும், ஐரோப்பியர் குடியேற்றத்தின் விளைவாக, 'ஐக்கிய அமெரிக்க நாடுகள்' தன் அபரிமிதமான தொழில் செல்வாதாரங்களேப் பயன்படுத்த முடிந்தது. மேல் ஐரோப்பா, குறிப்பாக இங்கிலாந்து தேசம் தொழில் துறையில் இதுவரையில் வகித்துவரும் ஏகபோக ஆதிக்கத்தைக் கூடிய சீக்கிரத்தில் தகர்க்கக்கூடிய வகையில், மிகுந்த ஊக்கத்துடனும் விரிந்த அளவிலும், அது (இந்தத் தொழில் வளர்ச்சி-மொர்.) கைகூடி வருகிறது. இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் அமெரிக்காவையே புரட்சிகரமான முறையில் பாதிக்கின்றன. அரசியல் சட்ட முழுமைக்குமே அடிப்படையாகவுள்ளவை குடியானவர்களின் சிறிய, நடுத்தர நிலஉடைமைகளாகும்; அவை ராட்சஸப் பண்ணேகளின் போட்டிக்கு முன்னுல், படிப்படியாக அழிந்து கொண்டிருக்கின்றன. அதே சமயத்தில், முதல் தடவையாக, தொழில் பிரதேசங்களில், பிரம்மாண்டமான நவீனத் தொழிலாளர் கூட்டம் உருப்பெற்று வருகிறது; அத்துடன் குபேரச் செல்வமாக மூலதனங்கள் சேமிக்கப்பட்டு வருகின்றன.

இனி ருஷ்யாவைப் பார்ப்போம்! 1848-49 ஆண்டுகளில் புரட்சி ஏற்பட்ட பொழுது, ஐரோப்பிய மன்னர்கள் மட்டுமல்ல, ஐரோப்பிய பூர்ஷுவாக்கள்கூட, அப்பொழுது விழிப்படையத் தொடங்கிய தொழிலாளி வர்க்கத்திடமிருந்து தம்மைப் பாதுகாக்க வல்லது ருஷியத் தலேயீடு ஒன்றே என்று கருதினுர்கள். ஜார் மன்னனே ஐரோப்பிய பிற்போக்கு சக்திகளின் தலேவனுகப் பிரகடனம் செய்தனர். இன்று அவன் புரட்சியின் யுத்தக் கைதியாக, காட்சீனுவிலிருக்கிருன்; ருஷியா ஐரோப்பாவின் புரட்சிப் பணியின் முன்னணியில் நிற்கிறது.

நவீன பூர்ஷ்வா சொத்துரிமை கரைந்தொழியும் காலம் அணுகிக் கொண்டிருக்கிறதென்றும் அதைத் தவிர்க்க முடியாதென்றும் பிரகடனம் செய்வது கம்யூனிஸ்ட் அறிக்கையின் குறிக்கோளாயிருந்தது. ஆனுல் ருஷியாவில் நாம் காண்பதென்ன? முதலாளித்துவ மோசடி வேகமாகப் பெருகும்பொழுதே, பூர்ஷ்வா நிலச் சொத்துரிமை வளரத் தொடங்கும் பொழுதே, நாட்டு நிலத்தில்

பாதிக்குமேல் விவசாயிகளின் பொதுச் சொத்தாக விருப்பதைப் பார்க்கிறோம். இப்பொழுது பிரச்னை இதுதான்:— ருஷ்யாவின் கிராம சமுதாயம் பெரிய அளவுக்கு வேர் அறுக்கப்பட்டிருந்தாலும் கூட, அது பூர்வீகப் பொதுநில உடைமையின் ஒரு வடிவமாக விருக்கிறது. அது நேரடியாகக் கம்யூனிஸ்ட் பொதுஉடைமை என்ற உயர்ந்த வடிவத்தை அடைய முடியுமா? அல்லது அதற்கு மாருக, மேல் நாடுகளுடைய வரலாற்றின் பரிணமத்தில் நிகழ்ந்ததைப்போல, இந்தக் கிராம சமுதாயம் முதலில் கரைந்தொழிவது அவசியமா?

இன்று இதற்கு ஒரே ஒரு பதில்தான் சாத்தியம்: ருஷியப் புரட்சி மேனுடுகளில் தொழிலாளி வர்க்கப் புரட்சி நடைபெறுவதற்கான சங்கொலியாக விளங்கினல், அதன்மூலம் இரண்டும் ஒன்றையொன்று நிறைவு செய்துகொண்டால், இன்றைய ருஷியாவின் பொதுநில உரிமை கம்யூனிஸ்ட் வளர்ச்சிக்கு ஆரம்ப நிலையாகப் பயன்படலாம்.

லண்டன்,
1882, ஜனவரி, 21, } **காரல் மார்க்ஸ், பிரெடரிக் எங்கல்ஸ்.**

# 1883-ம் ஆண்டின் ஜெர்மானிய பதிப்புக்கு முகவுரை

அந்தோ! இந்தப் பதிப்பின் முகவுரைக்கு நான் மட்டும் கையெழுத்திடவேண்டும். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள தொழிலாளி வர்க்கம் முழுமையும், எந்த மனிதனுக்கு வேறு எவரையும்விட அதிகமாகக் கடமைப்பட்டிருக்கிறதோ, அந்த மனிதர், மார்க்ஸ், *ஹைகேட் மயானத்தில் ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கிருர். அவருடைய சமாதியின்மீது முன்பே புல்வகை துளிர்க்கத் தொடங்கிவிட்டது. அவருடைய மறைவுக்குப்பின், அறிக்கையைத் திருத்துவது என்பதோ அல்லது அதன் விட்டகுறையை நிரப்பிப் பூர்த்திசெய்வது என்பதோ சிந்தனையில் இடம்பெற முடியாது. அந்தக் காரணத்துக்காகவே, கீழ்க்கண்ட விஷயத்தை இங்கு வெளிப்படையாகக் கூறுவது அவசியமென்று நான் கருதுகிறேன்:

சரித்திரபூர்வமான ஒவ்வொரு சகாப்தத்தின் பொருளாதார உற்பத்தியும் தவிர்க்க முடியாமல் அதிலிருந்தே தோன்றும் சமுதாய அமைப்பும் அந்தந்த சகாப்தத்தின் அரசியல் வரலாற்றுக்கும் அறிவுஇயல் சரித்திரத்துக்கும் அஸ்திவாரமாகும். எனவே, (பூர்வீகக் காலத்தில் நிலம் பொதுச்சொத்தாக விளங்கிய முறை கரைந்தொழிந்ததிலிருந்து), சரித்திரம் முழுமையுமே வர்க்கப் போராட்டங்களின் வரலாருகவிருந்து வந்திருக்கிறது; சமுதாய வளர்ச்சியின் பல்வேறு கட்டங்களில், சுரண்டுகிறவர்களுக்கும் சுரண்டப்படுகிறவர்களுக்குமிடையே, ஆதிக்க வர்க்கங்களுக்கும் ஆளப்படும் வர்க்கங்களுக்குமிடையே நடைபெறும் போராட்டங்களின் சரித்திரமாக இருந்துவந்திருக்கிறது. இந்தப் போராட்டம் இன்று எத்தகைய கட்டத்தை அடைந்திருக்கிறதென்ருல், சுரண்டலுக்கும் ஒடுக்குமுறைக்கும் உட்பட்டுள்ள வர்க்கமானது (நவீனத் தொழிலாளி வர்க்கம்), சுரண்டல், ஒடுக்குமுறை, வர்க்கப் போராட்டங்கள் ஆகியவற்றிலிருந்து சமுதாயம் முழுவதையுமே நிரந்தரமாக விடுதலை செய்யாமல், தன்னை ஒடுக்கிச் சுரண்டும் வர்க்கத்திடமிருந்து (பூர்ஷுவாக்களிடமிருந்து), தன்னைமட்டும்

---

* இது லண்டனில் இருக்கிறது, (மொ-ர்,)

விடுதலை செய்துகொள்ளமுடியாது. இந்த அடிப்படையான *கருத்து பரிபூர்ணமாக மார்க்ஸுக்கே உரியதாகும்.

நான் முன்பே இதைப் பன்முறை எடுத்துரைத்திருக்கிறேன். ஆனால் இப்பொழுது, அறிக்கைக்கு முன்னாலும்கூட அது முதலிடம் பெறுவது அவசியமாகிறது.

லண்டன்,
1883, ஜூன் 28

பிரெடரிக் எங்கல்ஸ்

---

* இதுபற்றி 1888-ம் ஆண்டின் ஆங்கிலப் பதிப்பு முகவுரையில் விளக்கம் காண்க (மொ-ர்)

# 1890-ம் வருஷத்து ஜர்மானிய பதிப்பின் முகவுரை

மேலேயுள்ளதை எழுதியபின், *அறிக்கையின் புதிய ஜர்மானியப் பதிப்பு மீண்டும் அவசியமாகிவிட்டது. மேலும் அறிக்கை சம்பந்தமாக நிகழ்ந்துள்ள பலவற்றை இங்கு குறிப்பிடவேண்டும்.

வீரா ஸாஸூலிச் செய்த இரண்டாவது ருஷிய மொழி பெயர்ப்பு 1882ல் ஜினீவாவில் வெளிவந்தது. நானும் மார்க்ஸும் அந்தப் பதிப்பின் முகவுரையை எழுதினேம். துரதிர்ஷ்டவசமாக, ஜர்மானிய கைப்பிரதியின் மூலம் †காணமற் போய் விட்டது. ஆகவே நான் அதை ருஷிய மொழிபெயர்ப்பிலிருந்து மீண்டும் மொழி பெயர்க்கவேண்டும்; அது மூலவாசகத்தைவிட எவ்வகையிலும் சிறந்ததாக விருக்கமுடியாது.

அதன் வாசகம் பின்வருமாறு:—[இந்த வாசகம், 1882-ம் வருஷத்து ருஷ்யப் பதிப்பின் முகவுரையில், 78–80 பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. (மொ-ர்)]

ஏறக்குறைய அதேகாலத்தில், ஒரு புதிய போலிஷ் பதிப்பு—**மானிபெஸ்ட் கம்யூனிஸ்டிஸ்னி**— ஜினீவாவிலிருந்து வெளிவந்தது.

மேலும், 1885ல், கோபன்ஹெகனில் ஒரு புதிய டேனிஷ் பதிப்பு "சோஷல் டெமாக்ரடிஸ்க் பிப்ளியோதெக்" என்பதில் வெளிவந்தது. துரதிர்ஷ்டவசமாக, அது பூர்த்தியாக விருக்கவில்லை; சில முக்கிய பகுதிகள் மொழிபெயர்ப்பாளருக்குக் கஷ்டமாக விருந்தனபோலும்; அவை விட்டுப்போயுள்ளன. மேலும் இங்கும் அங்கும் அஜாக்கிரதையின் அறிகுறிகளும் காணப்படுகின்றன. இந்தக் கவனக்குறைவு கண்ணை உறுத்தக் கூடியதாயிருக்கிறது; ஏனென்றால், மொழிபெயர்ப்பாளர் கொஞ்சம் கூடுதலான சிரத்தையை எடுத்திருந்தால் அவர் ஒரு அருமையான பணியைச் சாதித்திருக்கமுடியுமென்பதை மொழிபெயர்ப்புசுட்டிக்காட்டுகிறது.

---

* இங்கு 1883ம் ஆண்டின் ஜெர்மானியப் பதிப்புக்கு எழுதிய முகவுரையை எங்கல்ஸ் குறிப்பிடுகிருர். (ப-ர்.)

† காணமற்போன ஜெர்மனிய கைப்பிரதி கிடைத்துவிட்டது. இப்பொழுது அது மாஸ்கோவிலுள்ள மார்க்ஸ்-எங்கல்ஸ்-லெனின் கழகத்திடம் இருக்கிறது. இந்த முகவுரையில் அந்த ஜெர்மானிய மூலத்திலிருந்து நேரடியாக ஆங்கிலத்திலும். அதிலிருந்து தமிழிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது, (ப-ர்.)

1885ல் பாரிஸ் நகரத்தில், 'லெ சோஷலிஸ்ட்' என்ற பத்திரிகையில் ஒரு புதிய பிரெஞ்சு பதிப்பு வெளிவந்தது. அன்றுவரை வெளியிடப்பட்டவற்றில் அதுவே தலைசிறந்ததாகும்.

இதிலிருந்து ஒரு ஸ்பானிஷ் பதிப்பு தயாராகி, அதே ஆண்டில் வெளியிடப்பட்டது. அது முதலில் மாட்ரிட் நகரத்தின் 'எல் சோஷலிஸ்டா' என்ற பத்திரிகையிலும் பிறகு புத்தக வடிவமாகவும் வெளிவந்தது.

நமக்குள்ள ஆவலை முன்னிட்டு, இன்னொரு விஷயத்தையும் நான் குறிப்பிடலாம்: 1887ல் ஆர்மீனிய மொழிபெயர்ப்பின் கைப்பிரதி, கான்ஸ்டாண்டிநோபில் நகரத்துப் பதிப்பகத்தார் ஒருவரிடம் கொடுக்கப்பட்டது. ஆனால் அந்த நல்ல மனிதர், மார்க்ஸ் பெயரைத் தாங்கிய நூலை வெளியிடுவதற்குத் தைரியமில்லாதவர்; மொழிபெயர்ப்பாளர் தம்மையே நூலாசிரியராக வர்ணித்துக் கொள்ளவேண்டுமென்று அவர் யோசனை கூறினர்; ஆனால் அவர் (மொழிபெயர்ப்பாளர்) மறுத்துவிட்டார்.

ஏறத்தாழத் தவருன பல அமெரிக்க மொழிபெயர்ப்புகள் இங்கிலாந்தில் ஒன்றன்பின் ஒன்ருக திரும்பத் திரும்ப அச்சிடப்பட்டன. கடைசியில் 1888ல் ஒரு அதிகாரபூர்வமான பதிப்பு வெளிவந்தது. என் நண்பர் சாமுவேல்மூர் இதைச் செய்தார்; அதை அச்சுக்கு அனுப்புவதற்குமுன்னல், நாங்கள் இருவருமாக அதை மீண்டும் சரிபார்த்தோம். அதன் தலைப்பு பின்வருமாறு:–

"கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை. கார்ல் மார்க்ஸூம் பிரெடரிக் எங்கல்ஸூம் எழுதியது. அதிகாரபூர்வமான ஆங்கில மொழிபெயர்ப்பு. பிரெடரிக் எங்கல்ஸ் சரிபார்த்தது; அவருடைய விளக்கவுரையுடன் கூடியது; 1888, லண்டன், வில்லியம் ரீவ்ஸ், 185, பிளீட் தெரு, 9 ஈ. ஸி.".

அந்தப் பதிப்பின் சில குறிப்புகளை இந்தப் பதிப்பில் (ஜர்மானியப் பதிப்பில்-மொ-ர்.) நான் சேர்த்திருக்கிறேன்.

இந்த அறிக்கை தனக்கே உரித்தான ஒரு வரலாற்றை உடையது. அது தோன்றியபொழுது, விஞ்ஞான சோஷலிஸத்தின் முன்னணியால் உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டது. இந்த முன்னணி எண்ணிக்கையில் குறைவாயிருந்தது. (முதல் முக

வுரையில் குறிப்பிடப்படும் மொழிபெயர்ப்புகளே இதை ருசுப்பிக்கும்). அது விரைவிலேயே, 1848 ஜூனில் பாரிஸ் தொழிலாளர் தோல்வியுற்றதைத் தொடர்ந்து தொடங்கிய பிற்போக்கு ஆட்சியால் பின்னணிக்குத் தள்ளப்பட்டது. 1852 நவம்பரில் கலோன் கம்யூனிஸ்ட்களுடைய தண்டனைமூலம் அது இறுதியாகச் "சட்டப்படி" பிரஷ்டம் செய்யப்பட்டது. பிப்ரவரிப் புரட்சியுடன் தொடங்கிய தொழிலாளர் இயக்கம் பொது அரங்கிலிருந்து மறைந்ததோடு, அறிக்கையும் பின்னணிக்குச் சென்றது.

ஐரோப்பிய தொழிலாளிவர்க்கம் மீண்டும் ஆளும் வர்க்கங்களின் அதிகாரத்தின்மீது புதிய தாக்குதலைத் தொடுப்பதற்குப் போதுமான பலத்தைச் சேகரித்தவுடன், சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம் தோன்றியது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமிருந்த போர்க்குணம் வாய்ந்த தொழிலாளவர்க்க முழுவதையும் ஒரே பெரும் ராணுவத்தில் உருவாக்குவது அதன் நோக்கமாயிருந்தது. எனவே, அறிக்கையில் விதித்துள்ள கோட்பாடுகளிலிருந்து அது தொடங்க முடியவில்லை. ஆங்கிலேயத் தொழிற்சங்கங்கள், பிரெஞ்சு பெல்ஜிய இத்தாலிய ஸ்பானிஷ் புருதானிஸ்டுகள், ஜர்மானிய *லாஸாலியன்கள் ஆகியோருக்குக் கதவு அடைக்காத திட்டமாக அதன் திட்டம் இருக்கவேண்டும். இந்தத் திட்டத்தை - சர்வதேச ஸ்தாபன விதிகளின் பீடிகையை - மார்க்ஸ் வகுத்தார். பாக்குனினும் அனார்க்கிஸ்டுகளும்கூட மார்க்ஸ் மிகுந்த திறமையுடன் திட்டம் வகுத்திருப்பதை அங்கீகரித்தார்கள். அறிக்கையில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் இறுதிவெற்றி அடைவதற்கு, ஒன்றுபட்ட நடவடிக்கையிலிருந்தும் விவாதத்திலிருந்தும் தொழிலாளி வர்க்கம் அவசியமாகப் பெறும் அறிவு வளர்ச்சியில்மட்டும் மார்க்ஸ் நம்பிக்கை வைத்திருந்தார். மூலதனத்துக்கு எதிரான போராட்

* லாஸால் எப்பொழுதுமே எங்களிடம் தன்னை மார்க்ஸின் 'சீடராக' ஏற்றுக்கொண்டார்; அந்த முறையில் அவர் அறிக்கையின் அடிப்படையில் நின்றாரென்பது உண்மை. ஆனால் அரசாங்கத்தின் கடன் உதவியுடன் உற்பத்தியாளர் கூட்டுறவுத் தொழில்களை நடத்த வேண்டுமென்பதற்குமேல் கோரிக்கை வகுக்காதவர்களும், தொழிலாளி வர்க்கத்தை அரசாங்க உதவியின் ஆதரவாளர்கள் என்றும் சுய உதவியின் ஆதரவாளர்கள் என்றும் பிரித்தவர்களுமான லாஸாலைப் பின்பற்றுகிறவர்களைப் பொறுத்தவரை விவகாரங்கள் வேறுவிதமாக விருந்தன. (எங்கல்ஸ் குறிப்பு)

டத்தின் நிகழ்ச்சிகளும் சாதக பாதக மாறுதல்களும் அதில் ஏற்படும் வெற்றிகளைவிடவும் அதிகமாக அதன் தோல்விகளும், போராடும் தொழிலாளருக்கு, அதுவரை அவர்கள் சர்வரோக நிவாரணிகளாகக் கருதியவற்றின் குறைபாட்டை உணர்த்தி, தொழிலாளர் விமோசனத்துக்குத் தேவையான உண்மையான நிலைமைகளை முற்றிலும் புரிந்துகொள்வதற்கு அவர்களுடைய மனதைப் பக்குவப்படுத்தித்தானாகவேண்டும். இவ்வாறு மார்க்ஸ் கருதியது சரியாகவே இருந்தது. 1874ல் சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம் கலைந்தபொழுது, அக்காலத்திய தொழிலாளிவர்க்கம் 1864ம் வருஷத்து நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது. லத்தீன் குடும்ப மொழிகளைப் பேசும் நாடுகளில் நிலவிய புருதானிஸமும், ஜர்மனியிலிருந்த லாஸ்ஸாலியனிஸமும் நசித்துக்கொண்டிருந்தன. கடைந்தெடுத்த கர்னாடகப் போக்குக் கொண்ட ஆங்கிலேய தொழிற்சங்கங்கள்கூட எந்த அளவுக்குப் படிப்படியாக முன்னேறின என்றால், 1887ல் அவற்றின் காங்கிரஸ் ஸ்வான்ஸீயில் கூடியபொழுது அவற்றின் பெயரால் அந்தக் காங்கிரஸ் தலைவர், "ஐரோப்பிய நிலப்பரப்பின் சோஷலிஸத்திடம் எங்களுக்கு இருந்த நடுக்கமும் பயமும் போய்விட்டது" என்று குறிப்பிட்டார். எனினும், 1887ல் ஐரோப்பிய நிலப்பரப்பின் சோஷலிஸம் அநேகமாக, அறிக்கை முரசொலித்த தத்துவமாகவே இருந்தது. ஆக, அறிக்கையின் வரலாறு, 1848 லிருந்துள்ள நவீன தொழிலாளிவர்க்க இயக்க சரித்திரத்தை ஒரு அளவுக்குப் பிரதிபலிக்கிறது. தற்காலத்தில், சோஷலிஸ்ட் நூல்கள் அனைத்திலும் அறிக்கையே மிகவும் அதிகமாகப் பரவியிருக்கிறதென்பதிலும் அதுவே மிகவும் அதிகமாகச் சர்வதேசத்தன்மை பெற்றிருக்கிறதென்பதிலும் சந்தேகமில்லை. சைபீரியா முதல் காலிபோர்னியாவரையுள்ள சகல நாடுகளிலும் பலகோடித் தொழிலாளரின் பொதுத் திட்டமாக அது திகழ்கிறதென்பதிலும் சந்தேகமில்லை.

எனினும், அது வெளிவந்தபொழுது, நாங்கள் அதை ஒரு சோஷலிஸ்டு அறிக்கையென்று பெயரிட்டிருக்கமுடியாது. 1847ல் இருவகையினர் சோஷலிஸ்டுகளாகக் கருதப்பட்டனர். ஒருபுறத்தில், பல்வேறு கற்பனைமுறைகளைத் தழுவியவர்கள்; குறிப்பாக,

இங்கிலாந்தில் ஓவனைச் சார்ந்தவர்கள், பிரான்ஸில் பூரியரைச் சார்ந்தவர்கள்; இவர்கள் அப்பொழுதே வெறும் தனிக் குழுக்களாகச் சுருங்கிவிட்டனர்; கொஞ்சம்கொஞ்சமாக மடிந்துகொண்டிருந்தனர். மறுபுறத்தில், பலவகைப்பட்ட சமுதாயக் குருட்டு வைத்தியர்களும் சோஷலிஸ்டுகளாகக் கருதப்பட்டனர்; அவர்கள் மூலதனத்தையும் லாபத்தையும் கொஞ்சமும் நோகச்செய்யாமல், தமது பல்வேறு சர்வரோக நிவாரணிகள்மூலமும் சகலவிதமான ஒட்டுத் தையல் வேலைகள்மூலமும் சமூகக் கேடுகளை அகற்ற விரும்பினார்கள். இருசாராருமே (கற்பனாவாதிகள், போலி வைத்தியர்கள் - மொ-ர்.) தொழிலாளர் இயக்கத்துக்கு வெளியே நின்றவர்கள்; "கற்றறிந்த படிப்பாளி" வர்க்கங்களின் ஆதரவை விசேஷமாக நாடியவர்கள். எனினும் வெறும் அரசியல் புரட்சிகள்மட்டும் போதாதென்பதை உணர்ந்து, சமுதாயத்தைத் தீவிரமாக மாற்றியமைக்க வேண்டுமென்று, தொழிலாள வர்க்கத்தின் ஒரு பகுதி கூறிற்று; அது தன்னைத்தானே **கம்யூனிஸ்ட்** என்று அழைத்துக்கொண்டது. அப்பொழுதும் அது முதல் உருவமாகவே இருந்தது; தன்னியல்பாக எழுந்ததாயிருந்தது; அடிக்கடி ஓரளவுக்குப் பக்குவமடையாத கம்யூனிஸமாகயிருந்தது. எனினும், பிரான்ஸ் தேசத்தில், **காபெட்** என்பவருடைய "ஐகேரியன்" கம்யூனிஸம், ஜெர்மனியில் **வைட்லிங்** என்பவருடைய கம்யூனிஸம் ஆகிய இரு கற்பனை கம்யூனிஸ்ட் முறைகளைத் தோற்றுவிக்கும் அளவுக்கு அது பலம் பெற்றிருந்தது. 1847-ல் சோஷலிஸம் ஒரு பூர்ஷ்வா இயக்கத்தைக் குறித்தது; கம்யூனிஸம் ஒரு தொழிலாளி வர்க்க இயக்கத்தை குறித்தது. ஐரோப்பிய நிலப்பரப்பிலாவது, சோஷலிஸம் கௌரவத்துக்குரியதாகவிருந்தது; கம்யூனிஸம் அதற்கு நேர்மாறான அந்தஸ்தைப் பெற்றிருந்தது. அவ்வளவு முன்பான அக்காலத்திலேயே "தொழிலாளி வர்க்கத்தின் சொந்த நடவடிக்கைகள் மூலமே தொழிலாளர் விமோசனம் கைகூடவேண்டும்" என்று நாங்கள் தீர்மானமான கருத்தைக் கொண்டிருந்தபடியால் இரு பெயர்களில் எதை எடுத்துக்கொள்வதென்பதில் எங்களுக்குத் தயக்கம் ஏற்பட்டிருக்க முடியாது. அதற்குப் பிறகும், மேற்கொண்ட பெயரை மறுக்கும் எண்ணம் எங்களுக்கு ஒருபொழுதும் ஏற்படவில்லை.

"சர்வதேசத் தொழிலாளர்களே! ஒன்றுபடுங்கள்!" இந்த கோஷத்தை நாங்கள், நாற்பத்திரெண்டு வருஷங்களுக்கு முன் தொழிலாளி வர்க்கம் தன் சொந்தக் கோரிக்கைகளுடன் முன் வந்தபொழுது, முதலாவது பாரிஸ் புரட்சி ஏற்படும் தருவாயில், பிரகடனம் செய்தோம். ஆனால் அப்பொழுது சிலரே அதை எதிரொலித்தனர் எனினும், 1864-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 28-ந் தேதி, மிகப் பெரும்பாலான மேல் ஐரோப்பிய நாடுகளின் தொழிலாளர்கள் மகிமை மிகுந்த நினைவுக்குரிய சர்வ தேச தொழிலாளர் ஸ்தாபனத்தில் கைகோர்த்து நின்றனர். அந்த சர்வதேச ஸ்தாபனமே ஒன்பதாண்டுகள்தான் வாழ்ந்ததென்பது உண்மை. ஆனால், சர்வதேச தொழிலாளர்களிடையே அது அழியாத ஒற்றுமையைச் சிருஷ்டித்தது; அந்த நிரந்தர ஐக்கியம் இன்றும் உயிர் வாழ்வதற்கும், அது முன்பிருந்ததைவிடக் கூடுதலான பலம் பெற்றிருப்பதற்கும் இன்றைய தினத்தைக் காட்டிலும் உயர்ந்த சான்று ஒன்றுமில்லை. எப்படியென்றால், இன்று நான் இந்த வரிகளை எழுதிக்கொண்டிருக்கும்பொழுது, ஐரோப்பிய அமெரிக்க நாடுகளின் தொழிலாளர்கள், முதன் முதலாகத் திரட்டப்பட்ட, ஒரே ராணுவமாக, ஒரே கொடியின்கீழ், ஒரே உடனடி லட்சியத்துக்காகத் திரட்டப்பட்ட தமது போர்ப் படைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருக்கின்றனர். 1867-ல் ஜினிவாவில் கூடிய சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனக் காங்கிரஸ் பறைசாற்றியதைப் போல, மீண்டும் 1889-ல் பாரிஸில் கூடிய தொழிலாளர் காங்கிரஸிலும் பறைசாற்றப்பட்டதைப் போல, எட்டுமணி நேர வேலைநாளை சட்டபூர்வமாக ஸ்தாபிக்க வேண்டுமென்ற ஒரே உடனடி நோக்கத்துக்காக அவர்கள் திரண்டு நிற்கிறார்கள். இப்பொழுது, சகல தேசங்களின் தொழிலாளரும் நிச்சயமாகவே ஒன்றுபட்டு விட்டார்களென்ற உண்மையை இன்றைய காட்சி, சர்வதேசங்களின் முதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் உணர்த்தும்.

அந்தோ! தன் கண்களாலேயே இந்தக் காட்சியைக் காண்பதற்கு மார்க்ஸ் என் அருகில் இன்றும் இருந்திருப்பாரானால்!

லண்டன்,
1890, மே 1.

பி. எங்கல்ஸ்

# 1892-ம் ஆண்டின் போலிஷ் பதிப்புக்கு *முகவுரை

போலிஷ் மொழியில் கம்யூனிஸ்ட் அறிக்கையின் புதிய பதிப்பு அவசியமாகிவிட்டதென்ற விஷயம் பல்வேறு சிந்தனைகளை எழுப்புகிறது.

முதலாவதாக, சமீபகாலத்தில், ஐரோப்பாக் கண்டத்தின் பெருந் தொழில் வளர்ச்சிக்கு அறிக்கை ஒரு அறிகுறி மாதிரியிருப்பது குறிப்பிடத்தக்கது. குறிப்பிட்ட தேசத்தில், எந்த அளவுக்குப் பெருந் தொழில் விரிவடைகிறதோ, அந்த அளவுக்கு அந்த நாட்டுத் தொழிலாளர் மத்தியில், உடைமை வர்க்கங்களின்பால் தொழிலாளி வர்க்கம் என்ற முறையில் தனக்குள்ள உறவைக் குறித்து அறிவைப் பெறவேண்டுமென்ற கோரிக்கை அதிகரிக்கிறது; அவர்கள் மத்தியில் சோஷலிஸ்ட் இயக்கம் பரவுகிறது; அத்துடன் அறிக்கையின் தேவையும் அதிகரிக்கிறது. ஆக, ஒவ்வொரு தேசத்திலும், அந்தந்த நாட்டு மொழியில் எத்தனைப் பிரதிகளில் அறிக்கை செலவாகிப் புழங்கிக்கொண்டிருக்கிறது என்ற கணக்கைக் கொண்டு அந்தந்த நாட்டுத் தொழிலாளர் இயக்க நிலையை மட்டுமல்ல, அந்தந்த நாட்டுப் பெருந் தொழில் வளர்ச்சியின் அளவைக்கூட அநேகமாகப் பிழையற்ற முறையில் அளவிட முடியும்.

ஆகவே, இந்தப் புதிய போலிஷ் பதிப்பு போலிஷ் தொழிலின் தீர்மானமான வளர்ச்சியைச் சுட்டிக்காட்டுகிறது. இதற்கு முந்தையப் பதிப்பு, பத்து ஆண்டுகளுக்குமுன் வெளியானபின், இந்த தொழில்முன்னேற்றம் உண்மையில்ஏற்பட்டிருக்கிறதென்பதில்சந்தேகமில்லை. ருஷ்யப் போலந்து, அதாவது, காங்கிரஸ் போலந்து† ருஷ்ய சாம்ராஜ்யத்தின் பெரிய தொழில் பிரதேசமாகிவிட்டது. ருஷ்யாவின் பெருந் தொழில் தனித்தனியாக அங்கும் இங்குமாகச்

---

* இந்த முகவுரை ஜெர்மானிய மூலத்திலிருந்து ஆங்கிலத்திலும் அதிலிருந்து தமிழிலும் மொழிபெயர்க்கப்பட்டது.

† 1815ல் வியன்ன காங்கிரஸில் ஏற்பட்ட உடன்பாட்டின் பிரகாரம் போலந்தில் ஒரு பகுதி ருஷ்யாவின் வசப்பட்டது. அதையே எங்கல்ஸ் காங்கிரஸ் போலந்து என்று கூறுகிறார். (மொ-ர்.)

சிதறுண்டிருக்கிறது; ஒரு பகுதி, பின்லாந்து வளைகுடாப் பிரதேசத்தில்; இன்னொரு பகுதி, மத்தியப் பிரதேசத்தில் (மாஸ்கோ, விளாட்மிர்); மற்றொரு பகுதி, கருங் கடற்கரை, அஜாவ் கடற்கரை பிரதேசங்களில்; மற்றப் பகுதிகள் வேறு இடங்களில். ஆனால் இவற்றோடு ஒப்பிடும்பொழுது, போலிஷ் தொழில் ஒரு சிறு பிரதேசத்தில் குவிந்திருக்கிறது; அதனால் ஏற்படும் சாதகபாதகங்களை அனுபவிக்கிறது. போலிஷ் மக்களை ருஷ்யர்களாக்குவதில் ருஷ்யத் தொழிலதிபர்கள் பேராவல் கொண்டிருந்தபோதிலும், அவர்கள் போலந்துக்கு எதிராகப் பாதுகாப்புச் சுங்கம் கோரினார்கள். அவ்வாறு கோரும்பொழுது போலிஷ் தொழிலின் அனுகூல நிலையை அத்துடன் போட்டியிட்ட ருஷ்யத் தொழிலதிபர்கள் ஒப்புக்கொண்டார்கள். போலிஷ் தொழிலாளர் மத்தியில் சோஷலிஸ்ட் கருத்துக்கள் வேகமாகப் பரவுவதிலும், அறிக்கையின் தேவை அதிகரிப்பதிலும், போலிஷ் தொழிலதிபர்களுக்கும் ருஷ்ய சர்க்காருக்குமுள்ள பிரதிகூலங்கள் நன்கு புலப்படுகின்றன.

ஆனால் ருஷ்யத் தொழிலபிவிருத்தியையும்விட மேலாக போலிஷ் தொழில் அடைந்துவரும் துரித வளர்ச்சி, போலிஷ் மக்களுடைய வற்றாத ஜீவசக்திக்கு ஒரு புதிய ருசுவாகும்; சீக்கிரத்தில், அவர்களுடைய தேசீய அந்தஸ்து மீண்டும் நிலைநாட்டப்படவிருப்பதற்கு ஒரு புதிய உத்திரவாதம். ஒரு சுயேச்சையான, பலம்வாய்ந்த போலந்து மீண்டும் உருப்பெறுவதானது போலிஷ் மக்களுடைய பிரச்னைமட்டுமல்ல; நாம் அனைவரும் அக்கரை கொள்ளவேண்டிய பிரச்னையுமாகும். ஒவ்வொரு ஐரோப்பிய தேசீய இனத்தவரும் தத்தம்நாட்டில் பரிபூர்ண சுயாட்சி பெற்றிருந்தால்தான், ஐரோப்பிய தேசீய இனங்களுக்கிடையே உண்மையான சர்வதேச ஒத்துழைப்பு சாத்தியமாகும். 1848-ம் வருடப் புரட்சியானது, தொழிலாளிவர்க்கக் கொடியின்கீழ், தொழிலாளிவர்க்கப் போர்வீரர்கள் பூர்ஷ்வாக்களின் வேலையைச் செய்யும்படி அனுமதித்தது. ஆனாலும், அது தன் உயில் பத்திரத்தை நிறைவேற்றுவோரான லூயி போனபார்த், பிஸ்மார்க் ஆகியோர்மூலம், இத்தாலி, ஜெர்மனி, ஹங்கேரி ஆகிய நாடுகளின் சுதந்திரத்தைப் பெற்றுக்கொடுத்தது. எனினும், 1792 லிருந்து இந்த மூன்று நாடுகளும் மொத்தமாக ஆற்றியதைவிட அதிக

மாகப் புரட்சிக்குப் பணியாற்றியுள்ள போலந்து, 1863ல் பத்து மடங்கு பெரிய ருஷ்ய சக்திக்கு அடங்க நேர்ந்தபொழுது, அது தன்னந்தனியாக விடப்பட்டது, பிரபுக்களால் போலிஷ் சுதந்தி ரத்தைப் பராமரிக்கவும் முடியவில்லை ; அதை (இழந்தபின்) மீட்க வும் முடியவில்லை.

குறைந்தபட்சமாகச் சொல்வதென்ருல், பூர்ஷ்வாக்களுக்கு இன்று இந்தச் சுதந்திரத்தைப்பற்றிக் கவலையில்லை. எனினும், ஐரோப்பிய தேசங்களின் சௌஜன்ய ஒத்துழைப்புக்கு அது அவசியம். இளம் பருவத்திலுள்ள போலிஷ் தொழிலாளிவர்க் கத்திஞல்தான் அதைச் சாதிக்கமுடியும். அதன் கரங்களில் அந்தச் சுதந்திரம் பத்திரமாகவிருக்கும். ஏனெனில் போலிஷ் தொழிலாளர்களுக்கு போலிஷ் சுதந்திரம் எவ்வளவு தேவையோ, அதே அளவுக்கு அது இதர ஐரோப்பிய நாடுகளின் தொழிலாள ருக்கும் தேவையாகும்.

லண்டன்
1892, பிப்ரவரி 10

பிரெடரிக் எங்கல்ஸ்

## 1893-ம் ஆண்டின் இத்தாலியப் பதிப்புக்கு முகவுரை

### இத்தாலிய வாசகருக்கு :

1848-ம் வருடம் மார்ச் மாதம் 18-ம் தேதி, மிலான் நகரத்திலும் பெர்லின் நகரத்திலும் புரட்சி நிகழ்ந்த நாள்; அதே தினத்தில் கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை வெளிவந்தது என்று சொல்லலாம். பெர்லினிலும் மிலானிலும் நடைபெற்ற புரட்சிகள், ஐரோப்பா கண்டத்தின் மையத்திலிருந்த தேசிய இனமும், மத்தியதரைக் கடல் பிரதேசத்தின் மையத்திலிருந்த தேசிய இனமும் நடத்திய ஆயுதமேந்திய எழுச்சிகளாகும். இந்த இரு தேசிய இனங்களும் அதுவரை பிளவுபட்டு, உள்நாட்டுச் சச்சரவுகளால் பலவீனப்பட்டு, அதன் பலனாக அன்னிய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தன. இத்தாலி, ஆஸ்திரியாவின் சக்கிரவர்த்திக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது; ஜெர்மனிமீது ருஷ்ய ஜாராட்சியின் நுகத்தடி மறைமுகமா யிருந்ததென்றாலும், அது, இத்தாலி மீதிருந்த ஆதிக்கத்துக்குச் சளைத்ததாயில்லை. 1848-ம் ஆண்டு மார்ச் 18-ன் விளைவுகளால், இத்தாலியும் ஜெர்மனியும் இந்த அவமானத்திலிருந்து விடுதலை பெற்றன. 1848-க்கும் 1871-க்குமிடையே இந்த இரு பெரிய தேசங்களும் புனரமைத்துக்கொண்டு, எப்படியோ மீண்டும் சுய பலத்தில் நிற்க முடிந்ததென்றால், அதற்குக் காரணம், கார்ல் மார்க்ஸ் கூறி வந்ததைப்போல, 1848-ம் வருடப் புரட்சியை அடக்கியவர்களே, அவர்களுடைய விருப்பத்துக்கும் மாறாக, அந்தப் புரட்சியின் உயிலை நிறைவேற்றுகிறவர் (எக்ஸிக்யூட்டர்)களாகச் செயலாற்றியதேயாகும்.

ஒவ்வொரு இடத்திலும், அந்தப் புரட்சியைச் சாதித்தது தொழிலாளி வர்க்கமாகும்; தொழிலாளி வர்க்கம்தான் வீதிகளில் அடைப்புகளை (பாரிகேடுகள்) நிறுவி உயிரையும் உதிரத்தையும் ஈந்து போராடியது. சர்க்காரை வீழ்த்தும்பொழுது, பூர்ஷ்வா ஆட்சி முறைக்கே முடிவுகட்ட வேண்டுமென்ற மிகவும் திட்டமான நோக்கம் பாரிஸ் நகரத் தொழிலாளருக்கு மட்டுமே இருந்தது. ஆனால், அவர்கள், தமது வர்க்கத்துக்கும் பூர்ஷ்வாக்களுக்குமிடையேயிருந்த ஜன்மப் பகையை உணர்ந்திருந்தபோதிலும், ஒரு

சமுதாய புனர் நிர்மாணத்தைச் சாத்தியமாக்கும் அளவுக்கு,
தேசத்தின் பொருளாதார முன்னேற்றமோ பிரெஞ்சு தொழிலாளி
மக்களின் அறிவு வளர்ச்சியோ அன்று ஏற்பட்டிருக்கவில்லை.
ஆகவே, இறுதியாகப் பரிசீலித்துப் பார்த்தால், புரட்சியின் பலன்
கள் முதலாளி வர்க்கத்துக்கே கிடைத்தன. இதர நாடுகளில்,
இத்தாலியிலும் ஜர்மனியிலும் ஆஸ்திரியாவிலும், ஆரம்பத்தி
லிருந்தே, தொழிலாளர்கள் பூர்ஷ்வாக்களை அதிகாரத்தில்
அமர்த்துவதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. ஆனால்
தேசீய சுதந்திரமில்லாத எந்த நாட்டிலும், பூர்ஷ்வாக்களின்
ஆட்சி சாத்தியமல்ல. எனவே, 1848ம்ஆண்டுப் புரட்சி, அத்
துடன் கூடவே, அதுவரை ஐக்கியமடையாமலும் சுயாட்சி அடை
யாமலும் இருந்த தேசீய இனங்களுக்கு ஐக்கியத்தையும் சுயாட்
சியையும் கொண்டுவரவேண்டி யிருந்தது. அவையே இத்தாலி,
ஜர்மனி, ஹங்கேரி ஆகியவை. முறைப்படி, போலந்தும் இந்த
நிலையை அடையும்.

இவ்வாறாக, 1848ம் வருடப் புரட்சி சோஷலிஸ்ட் புரட்சியாக
விருக்காவிட்டாலும், அது அந்தப் புரட்சிக்கான பாதையைச் செப்
பனிட்டது ; சூழ்நிலையைப் பக்குவப் படுத்தியது. கடந்த நாற்பத்
தைந்து ஆண்டுகளில், பூர்ஷ்வா ஆட்சி, சகல நாடுகளிலும்
பெருந் தொழில்களுக்கு உத்வேகம் ஊட்டியதன்மூலம், ஒவ்வொரு
இடத்திலும், எண்ணிக்கை மிகுந்ததும், ஒருமிக்கச் சேர்க்கப்பட்ட
தும் சக்திமிகுந்ததுமான தொழிலாளி வர்க்கத்தைப் படைத்திருக்
கிறது. இவ்வாறாக, அறிக்கையின் வாசகத்தில் சொல்லப்
போனால், பூர்ஷ்வா ஆட்சி தனக்குச் சவக்குழி தோண்டுகிறவர்
களையே படைத்திருக்கிறது. ஒவ்வொரு தேசீய இனமும் சுயாட்
சியையும் ஐக்கியத்தையும் மீண்டும் நிலைநாட்டாமல், தொழிலாளி
வர்க்கத்தின் சர்வதேச ஒற்றுமையைச் சாதிக்க முடியாது; பொது
நோக்கங்களுக்காக இந்த தேசீய இனங்கள் சமாதான ரீதியில்,
அறிவு பூர்வமாக ஒத்துழைப்பதும் சாத்தியமில்லை. 1848க்கு முந்
திய அரசியல் சூழ்நிலையில், இத்தாலிய, ஹங்கேரிய, ஜர்மானிய,
போலிஷ், ருஷ்யத் தொழிலாளர்கள் கூட்டாகச் சர்வதேச நட
வடிக்கை எடுக்கமுடிந்திருக்குமா என்பதைக் கற்பனை செய்து
பாருங்கள் !

ஆகவே, 1848ல் நடத்திய போராட்டங்கள் வீண் போக வில்லை. அந்தப் புரட்சிச் சகாப்தத்துக்குப்பின் உருண்டோடிய நாற்பத்தைந்து ஆண்டுகளும் விரயமாகவில்லை. கனிகள் முதிர்ந்து கொண்டிருக்கின்றன. அறிக்கையின் மூலப்பதிப்பு சர்வதேசப் புரட்சிக்கு முன்னறிவிப்பாக விளங்கியதைப்போல, இந்த இத்தாலியப் பதிப்பு, இத்தாலிய தொழிலாளி வர்க்கத்தின் வெற்றிக்கு முன்னறிவிப்பாக விளங்கவேண்டுமென்பதே என்னுடைய விருப்பம்.

கடந்த காலத்தில் முதலாளித்துவம் வகித்த புரட்சிகரமான பாத்திரத்துக்கு அறிக்கை முழு நியாயம் வழங்குகிறது. இத்தாலிதான் முதல் முதலாளித்துவ தேசம். பிரபுத்துவ மத்திய காலத்தின் முடிவையும் நவீன முதலாளித்துவ சகாப்தத்தின் துவக்கத்தையும் ஒரு மேதை அறிவித்தான். அவன் ஒரு இத்தாலியன், பெயர் தாந்தே. அவன் மத்திய காலத்தின் கடைசிக் கவியாகவும் நவீன காலத்தின் முதல் கவியாகவும் மிளிர்ந்தான். 1300ம் ஆண்டைப் போலவே, இன்றும் ஒரு புதிய சரித்திர சகாப்தம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்தப் புதிய தொழிலாளி வர்க்க சகாப்தத்தின் உதயத்தைக் குறிப்பிடும் ஒரு புதிய தாந்தேயை இத்தாலி நமக்கு அளிக்குமா?

லண்டன்,
1893, பிப்ரவரி 1.

பிரெடரிக் எங்கல்ஸ்.